குடியரசு வீரன்

# தளவாய் கோல்

(Gen. de Gaulle)

---

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்





விற்பனை உரிமையாளர்:
அன்பு நிலயம், பப்ளிஷர்ஸ்,
இராமச்சந்திரபுரம் (போஸ்ட்)
திருச்சி ஜில்லா.



கமர்ஷியல் பிரிண்டிங் அன் பப்ளிஷிங் ஹவுஸ்,
46, முத்துமாரி செட்டித் தெரு, சென்னை

# பதிப்புரை

தளவாய் கோல் என்னும் இந்நூல், எமது பிரசுராலயத்தின் 2-வது வெளியீடாகும். அடிமைப்பட்ட பிரான்சு தேசத்தை நாஜிக்கொடுமை யினின்றும் விடுவித்து, நான்காவது குடியரசை நிலை நாட்டிய பிரெஞ்சு வீரனின் சரிதையை, எமது வேண்டுகோள்மீது யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரவர்கள் எழுதி யுதவினார்கள்; அன்னாருக்கு எமது நன்றியாகுக.

இந்நூலின் விற்பனை உரிமை யனைத்தும், இராமச்சந்திரபுரம் அன்பு நிலயத்தாருக்கு அளித்துள்ளோம்; ஆதலால் புத்தகம் வேண்டுவோர், அவர்களுக்கு நேரே எழுதிப் பெற்றுகொள்க.

சென்னை, 14—1—46 } கமர்ஷியல் பிரின்டிங் அன் பப்ளிஷிங் ஹவுஸ்.

## ஆசிரியர் குறிப்புரை

தளவாய் கோல், நாஜிகளிடம் சிக்கி நலிந்த பிரான்சை ஆங்கிலேயர் உதவியைக்கொண்டு எப்படியோ வென்று, மீண்டும் குடியரசுக் கொடியை நாட்டினன். இச் செயலுக்காகவே அவனை "பிரெஞ்சு சுதந்தர வீரன்" என்று உலகம் பாராட்டுகிறது; என்றும் பாராட்டும்! இந்த மட்டிலேதான் நானும், கோலைப் பாராட்டுகிறேன். இந்த வீரச்செயலுக்காகவே நான் அவன் சரிதையை எழுதப் புகுந்தேன். இச் சரிதை, பாரிசில் குடியரசுக்கொடி நாட்டி, கோல் வீர கர்ஜனை செய்ததைக் கேட்டவுடன் எழுதப்பெற்றது. காலனிகளில் அவன் செய்த துப்பாக்கி யாட்சி, துர்ப்பாக்கிய மானதே. ஆனால், இந்த நூலுக்கும் அதற்கும் தொடர்பில்லை. 'அழிந்த பிரான்சிற்குப் புத்துயிரும், அடிமை நாட்டிற்குச் சுதந்தரமும் அளித்த வீரன், தளவாய் கோல்' என்பதில் சந்தேகமில்லை. சமீபத்தில் அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் அவ்வாறே இவனைப் புகழ்ந்தார்.

மனிதனிடம் நல்லதும் பொல்லதும் கலந்திருக்கும்; ஆதலால், இந்நூலைப் படிக்கும் நேயர்கள் 'தளவாய் கோல் அடிமை நாட்டிற்குச் சுதந்தரம் அளித்த வீரன்' என்ற முறையிலேயே இதனைக் கருதிப் படிப்பார்களாக.

—சு. பா.

# பொருளடக்கம்

குடியரசு வீரன்

# தளவாய் டேகால்

**(Gen. de Gaulle)**

## க. சுதந்தர பிரான்ஸ்

ஐரோப்பாவின் பழைய சாதியார் பிரெஞ்சு மக்களா வர். பிரான்ஸ் அரிய பெரிய சுதந்தர வீரர்களை யும், அறிஞரையும், கலைஞரையும் உலகிற்குத் தந்திருக் கிறது. சுதந்தர வாழ்வை உலகிற்குக் காட்டியது பிரான்ஸே. பிரான்ஸ் நீர்வளம், நிலவளம், கலைவளம், படைவளம், பொன்வளம், பொருள்வளம் ஆகிய எல்லா வளங்களும் செழித்த வல்லரசாக விளங்குகிறது. ரஷ்யா, பிரிட்டன், ஜெர்மனி, இதாலி, பிரான்ஸ் ஆகிய ஐந்து வல் லரசுகளே அமெரிக்காவுடன் உலகை ஆட்டி வைத்தன. பிரான்ஸ், நாகரிகத்தின் முன்னணியிலிருந்து மற்ற நாடு களை நடத்தியது. அதுவே முதலில் முடியரசைத் தகர்த் துக் குடியரசை நாட்டியது. மார்க்ஸ், லெனின் முதலிய பொதுவுடைமை வீரர்கள் பிரான்ஸிற்குக் கடமைப்பட் டிருக்கிறார்கள். எங்கெங்கே சுதந்தர தாகம் உண்டோ, அங்கங்கெல்லாம் பிரான்ஸ் தனது கருணைக் கதிர்களைப் பரப்பித் துணை புரிந்தது. மற்ற நாடுகளில் கொடுங்கோ லால் வருந்தும் தேசாபிமானிகளுக் கெல்லாம் பிரான்ஸே புகலளித்தது. 1429-ஆம் ஆண்டில் பிரான்ஸ் ஆங்கில வாளுக்குத் தோற்குஞ் சமயம் ழாந்தார்க் என்னும் ஆவேசக் கன்னிகை எழுந்து, ஓர்லியன்ஸில் பகைவரை முறியடித்துச்

சுதந்தரக்கொடி நாட்டினாள். அவள் பிடித்த வாள் இன்னும் உள்ளது. 1648ல் கிராம்வெல் இங்கிலாந்திற் செய்த புரட்சி தோற்றுப்போனது; பிரான்ஸில், 14-7-1789ல் எழுந்த ஜனநாயகப்புரட்சி, முடியரசைத் தூக்குப்போட்டுக் குடியரசை நாட்டிவிட்டது. வால்தேர், ரூஸோ முதலிய சமவாதிகள் கண்ட தத்துவத்தை, குடியரசு பிரான்ஸ் ஒருவாறு நிறைவேற்றி உலகிற்கே வழி காட்டியது. ஆனால் பிரெஞ்சுக் குடியரசு இடையிடையே ஆட்டங் கொடுத்தது. நெப்போலியன் பிரெஞ்சுக் குடியரசைத் தன் கைக்குள் வைத்துக் கொண்டு, ஐரோப்பாவையே ஆளக் கிளம்பினான். இங்கிலாந்தும் பிரஷ்யாவும் அவனை எதிர்த்து வாடர்லூவில் முறியடித்தன. நெப்போலியன் அரசிழந்து ஹெலனாத் தீவில் இறந்தான். அவனுக்குப் பிறகு, பூர்பூன் முடியரசு மீண்டும் தலை தூக்கிற்று. மீண்டும் ஜனநாயகப் புரட்சியெழுந்து, குடியரசை நாட்டியது. அந்தக் குடியரசை அடக்கி மூன்றும் நெப்போலியன் அரியணையேறினான். அவனை வீழ்த்தி 4-9-1870-ல் ஜனங்கள் மூன்றும் குடியரசை நாட்டினார்கள். இக் குடியரசே 1940-ஆம் ஆண்டு வரையில் நிலைத்தோங்கியது. போங்க்ரே குடியரசுத் தலைவனாயிருந்த காலத்தில், கெய்ஸர் போர் பலமாக நடந்தது. தமது கடும் பகைவரான ஜெர்மானியரை ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் முறியடித்து, *வெர்ஸேல்ஸ் உடன்படிக்கை நடத்தினார்கள். ஜெர்மனியின் நாடி, சில ஆண்டுகள் ஒடுங்கியிருந்தது

---

* 28-6-1919-ல் வெர்ஸேல்ஸ் உடன்படிக்கை நடந்தது. அதன்படி, சர்வதேச சங்கம் எழுந்தது- ஜெர்மனி, குடியேற்ற நாடுகள் (அல்ஸாஸ் லோரேன், டான்சிக்) எல்லாம் இழந்தது. அதன் போர்க்கருவிச் சாலைகள் ஒழிந்தன ; போர் விமானங்கள் பறிமுதலாயின. 1,00,000-ம் வீரரும் சில கப்பல்களுந் தவிர, வேறெந்த இராணுவ பலமும் அது வைத்துக் கொள்ளக்கூடாது என்றுபெற்று. 1930 வரையில் ஜெர்மனி, பிரெஞ்சு-ஆங்கிலப் பார்வையிலிருந்தது.

ஆனல் பிரான்ஸை எப்படியாவது பழிதீர்க்கவே ஜெர்மன் உள்ளம் கொதித்துக்கொண் டிருந்தது. கிழக்கே பொது வுடைமை ரஷ்யா, மேற்கே குடியரசு பிரான்சு இரண்டுமே ஜெர்மானியர் கண்ணில் உறுத்திக்கொண் டிருந்தன.

## உ. நாஜிகள் எழுச்சி

1929 முதல் ஜெர்மனியில் நாஜிகள் என்னும் நேஷனல்-சோஷலிஸ்டுகள் (National Socialists) கிளம்பினார்கள். இவர்களுக்குத் தலைவன். ஹிட்லர். ஹிட்லர், 1889-ல் ஆஸ்திரியாவிலுள்ள புரோனே நகரிற் பிறந்தவன். அவன் பிறந்து வளர்ந்ததெல்லாம் வறுமையிலேதான். அவன் படித்தது நாலே வகுப்புத்தான்; சித்திரக்கலை சிறிது கற்றுப் பரீக்ஷையில் குழிபறித்தான்; வியன்னவில் சிலநாள் செங்கலடுக்கிப் பிழைத்தான்; பிறகு வர்ணந்தீட்டும் வேலை செய்தான்; கார்டுகளுக்கு வர்ண மடித்து விற்றுப் பிழைத்தான் சிலகாலம்; ஆள் வாயாடி; அழுத்தமாக ஜெர்மன் பாஷையில் ஊர்வம்படிப்பதில் பேர் போனவன். 1911-ல் ஹிட்லர் மூனிச்சில் வர்ண மடித்துப் பிழைத்துக்கொண்டே அரசியல் விஷயங்களைப் பேசத் தொடங்கினன். 1914-ஆம் ஆண்டு கிளம்பிய போரில் வாலிப ஹிட்லர், ஜெர்மன் படையில் ஒரு சிறு காலாளாகச் சேர்ந்தான். போர் முடியும் சமயம் விஷப் புகையால் அவன் ஒரு கண்ணை யிழந்து, பிறகு சிகிச்சை செய்து கொண்டு பார்வையைப் பெற்றான். சண்டை முடிந்ததும், ஜெர்மன் அரசாங்கத்தில் அவனுக்கு ஒற்றன் வேலை கிடைத்தது.

அரசியற் கூட்டங்களைக் கண்காணிப்பதே அவ்வொற்றன் வேலை. ஆள் கெட்டிக்கார னதலால், கண்காணிப்புடன் கருத்திற்கும் வேலை கொடுத்துத் தனது அரசியல்

அறிவை ஹிட்லர் தீட்டிக்கொண்டான். இப்போது மூனிச்சில் ஜெர்மன் தொழிற் கட்சியெழுந்தது. அதன் தலைவர் அறுவரும் ஒரு சாப்பாட்டுக் கடையின் பின்புறமே இரகசியமாகக் கூடிப் பேசினர். அவர்களைக் கண்காணிக்கும் ஹிட்லர் ஏழாவதாளாகச் சேர்ந்து, அக்கட்சியை வளர்த்து, தேசீயச் சமவுரிமைக் கட்சியென்று பெயர் மாற்றி ஒரு புரட்சியை ஜோடித்து விட்டான். 1923-ஆம் ஆண்டு ஹிட்லர் மூனிச்சில் புரட்சி செய்தான்; அது பலிக்கவில்லை. அவனே லாண்ட்ஸ் பெர்க் கோட்டையிற் சிறையுண்டான். சிறையின் தனிமையில் அவனுக்குப் பெரிய எண்ணங்கள் எழுந்தன. அவற்றையெல்லாம் மெயின் காம்ஃப் (Mein Kampf) என்றொரு நூலாக எழுதித் தள்ளினன். எட்டு மாதங்களுக்குப் பிறகு விடுதலையான ஹிட்லர், அரசியல் தலைவனாக மேடையேறினன்; 1925-1927ல் மெயின் காம்ஃப் (எனது போராட்டம்) இரண்டாம் பாகமும் எழுதி முடித்தான்.

அதன் சுருக்கமாவது: "உலகிற் சிறந்தவர் ஆரிய மக்கள். ஜெர்மனியே ஆரியர் நிலைக்களம். உலகிற் சிறந்த மனிதர் ஜெர்மானியரே. அவர்களைக் கெடுத்து அழிக்க யூதர்கள் சூழ்ச்சி செய்கிறார்கள். பிரான்சும் சோவியத் ரஷ்யாவும், யூதர் ஆதிக்கம் பெற்ற நாடுகள். மற்ற ஐரோப்பியர்களைத் தாழ்த்தித் தம்மை உயர்த்தி, காங்கோ முதல் ரஷ்யா வரையில் தமது செல்வாக்கை உறுதியாக்கவே யூதர், சூழ்ச்சி செய்கிறார்கள். ஆதலால் அவர்களை அடியோடொழித்தாலே, ஆரியர் தலைதூக்க முடியும். பிரான்ஸில் யூதரும் நீக்ரோக்களும் கலந்து ஐரோப்பிய ரத்தத்தைக் கெடுக்கிறார்கள். பிரான்ஸை அடியோடொழித்து, நாஜிமயமாக்கவேண்டும். கிழக்கே ரஷ்யாவைத் தாக்கிக் கைப்பற்றவேண்டும் ஜெர்மனி ஐரோப்பாவை ஆண்டு, உலகிற் சிறந்த வலிமைபெற் றோங்கவேண்டும்.

இதற்காக ஏராளமான ஆயுதப் படைகளைச் சேர்க்க வேண்டும்.''

இந்தப் பேராசையை நிறைவேற்றப் புகுந்தான் ஹிட்லர். 1930-ஆம் ஆண்டு நடந்த தேர்தலில் ஹிட்லர் பெரும் வெற்றி பெற்றான். "நான் அரசவைத் தலைவனானால் முதலாளிகளுக்கு வேண்டிய நன்மை செய்வேன்; பொதுவுடைமையை உடைத்தெறிவேன்" என்றெல்லாம் ஆசை காட்டி ஹிட்லர், செல்வர் சலுகையைப் பெற்று. அரசியல் அதிகாரத்திற்குப் போட்டி போட்டான். அச் சமயம் ஜெர்மன் குடியரசுத் தலைவராயிருந்த வான் ஹிண்டன் பர்க் 1933-ஆம் ஆண்டு தமது பதவியையே ஹிட்லருக்குத் தந்து விலகிக்கொண்டார்.

அன்றுமுதல், போர்ப் பேய்க்கும் இரத்தப் பிசாசிற்கும் கொண்டாட்டந்தான்! யூதர்களுக்கும் பொதுவுடைமைக்காரருக்கும் தலை சுற்றது. சத்தியம் தயை இரக்கம் பரோபகாரம் என்பதெல்லாம் ஹிட்லரின் மூளையில் இடம்பெறுவதில்லை. எப்படியாவது எதிரிகளை வெட்டிச் சாய்ப்பதே அவனுக்கு வேலை. ஹிட்லர் தேசத் தலைவனானதுமே, ஜெர்மன் பார்லிமெண்டுக் கட்டிடத்தில் தானே தீயை வைத்துவிட்டு, அங்கே நின்று கொண்டிருந்த ஓர் எளிய டச்சுக்காரனைக் கைது செய்து, பொதுவுடைமைக் கட்சிக்காரரே தீமூட்டியதாகப் பேர் பண்ணி, ஆயிரக் கணக்கான பொதுவுடைமைக்காரரைக் கைது செய்தும் கொன்றும் தீர்த்தான். ஒற்று வேலையில் தேர்ந்த ஹிட்லர் கெஸ்டாபோ என்னும் ஒற்றர்களை ஏராளமாகப் பயிற்றித் தனக்கு ஆகாதவர்களையெல்லாம் இரகசியமாகப் பிடித்துக் கொன்று தீர்த்தான். இக்கொலையில் மிகத் தேர்ந்தவன் ஒற்றர் சிகாமணியான ஹிம்லர். ஹிட்லரின் அநியாயங்களையெல்லாம் பரம நியாயமென்று வர்ணமடித்து வாய்ப்பறையடிப்பவன், கெப்பல்ஸ். இன்னும் பல சகாக்களுடன் ஹிட்லர் மெயின் காம்ஃபில் எழுதியதெல்லாம் நிறைவேற்றத்

துணிந்தான் : ஒவ்வொரு ஜெர்மானியனும் போர்ப் பயிற்சி பெறத் தூண்டினுன் ; போர்க் கருவிகளைத் தந்திரமாகத் தயாரித்தான் ; வெர்ஸேல்ஸ் ஒப்பந்தத்தை முறியடித்தான். ஐந்தாண்டுகளில் ஹிட்லர் பெரும் படையும் படைக் கலங்களும் சேர்த்து, “ இனி ஐரோப்பாவை ஒரு கை பார்க்கிறேன் ” என்று கிளம்பினுன். மெல்ல மெல்ல நாடுவிழுங்கிப் பூதம்போல், ஆஸ்திரியாவை மிரட்டி ஆக்ரமித்துக் கொண்டான் ; பிறகு செக்கோஸ்லவோகியாவை விழுங்கினுன் ; பிறகு டான்சிக் துறைமுகத்தை வேண்டிப் போலந்தைத் தாக்கினுன். ஹிட்லரின் பலத்தை இங்கிலாந்து உணர்ந்தது. மந்திரி சேம்பர்லேன் மூனிச்சில் சமாதான உடன்படிக்கை செய்தும் பயனில்லை. எரிமலை வாயை மண்வைத் தடைத்தால் புகையாதிருக்குமா ? 1-9-1939-ல் டான்சிக்கைக் கைப்பற்றி, ஹிட்லர் போலந்திற்குள் படை நடத்தினுன். மகாயுத்தம் எழுந்தது. வார்ஸா பிடிபட்ட பிறகு அவன், “ நான் இத்துடன் சண்டையை நிறுத்தத் தயார் ; என்னைப் போருக்கிழுப்பது பிரான்சும், இங்கிலாந்துமே ” என்று சம்பமடித்தான். நேசநாடுகள் அவன் சொல்லை மதிக்கவில்லை. பிரான்ஸில் பெரும்படை யெழுந்தது. ஹிட்லர் பிரான்ஸைப் படையெடுத்து, டாங்குகளால் பதினுயிரக் கணக்கான பேரைக் கொலை செய்து பாரிஸில் நுழைந்தான் ; வெர்ஸேல்ஸ் உடன்படிக்கையைக் கொளுத்தி யெறிந்தான். சுதந்தர பிரான்ஸ், குடியரசு பிரான்ஸ், அரக்கன் கையிற் சிக்கியது. ஹிட்லருடன் சமாதானம் செய்துகொள்ள பெத்தான் சென்றுன். “ சமாதானமா ? கூடாது ; செய்வோம் போர்; இன்னும் பலமுண்டு” என்றொரு வீரக் குரல், பகைவர் நடுங்கக் கர்ஜித்தெழுந்தது ! அதுவே தளவாய் கோலின் குரல் ! ஜெர்மானியர் பாரிஸிற் புகுந்ததும், “எங்கே கோல் ? ” என்றே தேடினர் ! அவனிடம் அவர்களுக்குப் பயந்தான். ஏன் ? கோலின் கதையைக் கேளுங்கள் :

## ௩. சார்லெஸ் தெ கோல்

பிரான்ஸில் கோல் குடும்பம், கல்விக்கும் வீரத்திற்கும் புகழ் பெற்றது. அக் குடும்பத்தின் சுடர்மணியான நமது குடியரசு வீரன் சார்லெஸ் ஆந்திரே ஜோஸப் மாரி தெ கோல் (Charles Andre Marie de Gaulle) 22—11—1890-ஆம் ஆண்டு லில் (Lille) என்னும் ஊரிற் பிறந்தான். அவன் தந்தை பாரிஸ் ஜசூட் கல்லூரியில் தத்துவமும் இலக்கியமும் கற்பித்தார். மகனுக்குத் தந்தை பைபிள் கதைகளும் தத்துவ ஞானிகளின் சித்தாந்தங்களும் உபதேசித்து வந்தார். எட்டு வயதிலேயே கோல் எடுத்த புத்தகம் படித்தான், சிந்தித்தான், விநோதமான கேள்விகளைக் கேட்டான். பன்னிரண்டு வயதில் கோல், நீட்சே, ஹெகல், மோந்தாங், பாஸ்கல், ஷோபன்ஹார், தெக்கார்து முதலிய பெரிய தத்துவப் புலவரின் நூல்களைப் படித்தான். தந்தை மகனைச் சிறந்த வேதாந்தியாக்கவே முயன்றார். ஆனால் கோல், மகா துறுதுறுத்த பையன்; அரை நாழிகை சும்மா இருக்கமாட்டான்; நெப்போலியனைப்பற்றிப் படித்ததும் அவனைப்போலப் படைநடத்தி, விளையாடி வீட்டைப் போர்க்கள மாக்கிவிடுவான். அலெக்சாந்தரின் போர்த்திறனையும் ஹனிபாலின் சூரத்தனத்தையும் பள்ளி விளையாட்டிலேயே அவன் அரங்கேற்றினான். கோல் நிமிர்ந்த நடையும் நெடிய தோற்றமும், கூரிய மதிப்பொலிவுங் கொண்டவன். எதிர்த்த பகைவரை அவன் சக்கையாக, தந்திரமாக வெளுப்பான். அவனிடம் தோல்வி மனப்பான்மையே கிடையாது. சேனை விளையாட்டே அவனுக்குப் பிடித்திருந்தது. வேதாந்தத் தந்தை, மகனின் கருத்தை அறிந்து, அவனை ஸான் சீரில் (Saint cyr) உள்ள இராணுவக் கல்லூரியில் சேர்த்தார். அப்போது கோலுக்கு வயது இருபத்தொன்றுதான். கல்லூரிப் படிப்புடன் கோல் எப்

போதும் மூாந்தார்க்கைப் பற்றிச் சிந்திப்பான்; அவன் போலத் தனது நாட்டைக் காக்க நினைப்பான்; மூாந்தார்க்கு பிடித்தவாளை அடிக்கடி சென்று பார்ப்பான்; நெப்போலியனுடைய போர்க் கலையை ஆழ்ந்து கற்பான். இரண்டாண்டுகளில் கல்லூரிப் படிப்பை முடித்து, கோல் 1913-ஆம் ஆண்டு இராணுவத்தில் குதிரைப்படையிற் சேர்ந்தான். கல்லூரியில், அவனே முதல்வன்; இராணுவ சேவையிலும் அவன் தனது தலைவர்களை மிக்க மகிழ்வித்தான். அக்காலம் பிரான்ஸில் புகழ் பெற்ற இராணுவாதிகாரியான பெத்தான் (Petain) கோலின் திறமைகளைக்கண்டு வியந்தான். பெத்தான், கோலைத் தன் மகன்போல் அன்பு பாராட்டி உயர்த்தி, காப்டனுக்கினான்.

## ௪. லெஃப்டினன்ட் கோல்

1914-ஆம் ஆண்டு வெடித்தெழுந்தது, கெய்சர் போர்! ஜெர்மனி பிரான்ஸிற் புகுந்து அட்டகாசஞ் செய்தது. பிரிட்டிஷ் படைகள் ஜெர்மனியுடன் போராடித் திணறிக்கொண்டிருந்தன. இப்போரில் பெத்தான், கோலை ஒரு லெஃப்டினன்டாக்கித் தன்னுடன் வைத்துக்கொண்டான். கோல் மிக்க அபாயமான நெருக்கடிகளிலெல்லாம் பாய்ந்து சென்று, துணைபுரிந்து ஒவ்வொரு தடவையும் தனது வீரத்தனத்தை விளக்கினுன். 1916-ல் வெர்டன் போர் பலமாக நடந்தது. ஜெர்மன் படைகள் ஊழித்தீபோல் மோதின. தளவாய் பெத்தான், பகைப் படைகளை வெகு தீரமாக முறியடித்தோட்டி, பிரான்ஸைக் காப்பாற்றினுன். அவனுக்கு "வெர்டன் வீரன்" என்ற புகழ்மாலை கிடைத்தது. அப்போரில் கோல் தனது சூரத்தனங்களை உலகறியக் காட்டினுன். மூன்று தடவை காயமுண்டும், தாய்நாட்டிற்காக ஆயாசமின்றி அவன் குண்டுப்பணி செய்தான். இவ்வீரனைக் குறிவைத்துப் பகைவர் சிறைப் பிடித்தனர்.

ஜெர்மானியர் கோலைக் கடுவேலை வாங்கினார்கள். கோல் கைதியாயிருக்கப் பிரியப்படவில்லை; எப்படியாவது தப்பித்துக்கொண்டு பிரான்ஸிற்காகப் போர் புரியவே துடித்தான். ஒருதரம் ஒரு மலைப்பாறையைக் குடையும் வேலை அவனுக்குக் கிடைத்தது. வேலை செய்த நாளில் திடீரென்று ஒரு நாள் ஒரு ஜெர்மன் சிப்பாய்போல் வேடம் போட்டு, கோல் தப்பிச் சென்றான். ஆனால் வழியில் இந்த நெட்டையனைப் பார்த்த ஒரு தளகர்த்தன் இவ்வளவு உயரமான பேர்வழி யாரென்று நோக்கி, ஆளைத் தெரிந்து, உடனே கைதியாக்கி, முன்னிலும் கடும் உழைப்பிற் போட்டான். கோல் நான்குதரம் சிறைதப்பித் தாய்நாட்டின் பணியையே செய்ய முயன்றான். ஆனால் உயரம் அவனைக் காட்டிக் கொடுத்தது இரண்டாண்டு எட்டு மாதம் கோல் ஜெர்மானியர் பிடியிலிருந்தான். அப்போது அவன் ஜெர்மானியரின் இயல்பையும் சூழ்ச்சிகளையும் போர்க்கலைகளையும் ஆராய்ந்தான். ஜெர்மன் டாங்குகளைப்பற்றி முதன்மையாக ஆராய்ச்சி நடத்தினான்; ஜெர்மானியருக்குள் மனவேறுபாடிருந்ததையும் கண்டான்; அதுவே ஜெர்மனிக்குத் தோல்வி யளித்ததைக் குறித்தான்.

## ரு. தளவாய் கோல்

1918-ல் கோல் விடுதலையடைந்து வெர்ஸேல்ஸ் உடன்படிக்கை நடந்தபோது வந்துசேர்ந்தான். உடனே தன் அனுபவங்களைக்கொண்டு "பகைவரிடம் பிளவு" என்ற நூல் எழுதினான். அதில் "ஜெர்மனி தோற்றது, உட்பிளவினால்; ஆனால் அது மறுபடியும் பெரும்பலம் பெற்றெழுந்து போர் நடத்தும்; பிரான்ஸில் ஒற்றுமையும், அடுத்த போருக்குப் பெருந் தயாரிப்பும் வேண்டும்" என்று குறித்தான். பெத்தான் அவனுடைய தீர்க்க தரிசனத்தை மிக்க மதித்தான். பெத்தான் மார்ஷலானான்.

கோல் கம்மாண்டராகித் தான் கற்ற இராணுவக் கல்லூரியில் சில மாதம் சரித்திரம் போதித்தான்; 1921-ல் அவன் வார்சாவுக்குச் சென்று, போலந்தின் சுதந்தரத்தைக் காத்தான்; 1924-ல் போர்க் கல்லூரியில் உயர்ந்த இராணுவக்கலை பயின்று பெரிய பட்டம் பெற்முன். தளகர்த்தன் பட்டம் பெறுவோர் இராணுவ தந்திரப் பரீட்சையில் தேறவேண்டும். கல்லூரித் தலைவர் மோய்ரான் (Moyrand), தான் கற்ற தந்திரங்களை மாணவருக்குப் பயிற்றிப் படைநடத்தச் சொன்னார். பகைவர் தாக்குதலைத் தாங்கித் தப்பி, அவர்களை அலுக்கச்செய்து, பிறகு நாம் பலமாகத் தாக்கவேண்டுமென்பது அவரது போர்ச் சூழ்ச்சி. கம்மாண்டர் கோல், "இது போதாது; பகைவனைத் தந்திரமாக முதலிலேயே மடக்கவேண்டும். அவன் நம்மைத் தாக்கிப்பிடிக்க இடந்தரவே கூடாது. கிட்டவே வராமல் அவனைத் தந்திரத்தால் ஒழிக்கவேண்டும்" என்றான். இருவருக்கும் விவகாரம் முதிர்ந்தது. மோய்ரான், கோலைக் கடுமையான படைநடத்தச் செய்தான். கோலின் படையே வெற்றி பெற்றது! இதையறிந்த மார்ஷல் பெத்தான், "வீரனே, உனது போர்க்கலையைப் பற்றி இராணுவ மாணவருக்குத் தொடர்ச்சியாகச் சொற்பொழி" என்றான். கோல் இரண்டே வாரத்தில் தான் சுயமாகக் கண்ட இராணுவக் கலையை "இராணுவ தத்துவமும், தன்மையும்" என்ற நூலாக எழுதி இராணுவக் கல்லூரியில் அரங்கேற்றினன். மார்ஷல் பெத்தான் வந்து கேட்டு வியந்தான். உடனே கோல் தளவாயானன்; பொறுப்பான பெரிய வேலை பெற்றான். பெத்தான் கோலைத் தன் துணைவனாகவே வைத்துக் கொண்டிருந்தான். வேகாந்திற்குப் பெத்தான், தன் பதவியைத்தந்து ஓய்வு பெற்றபோது, கோலை ரைன் படைக்குத் தலைவனாக்கினன். கோல் இராக்கிலும் எகிப்திலும் சில காலம் இருந்தான். 1932-ஆம் ஆண்டு அவன் தன் இராணுவ அனுபவத்

தைக்கொண்டு 'வாள் விருக்கு' என்றொரு நூலை எழுதி வெளி யிட்டான். இச்சமயம் பெத்தான் போர் மந்திரியானான். பிரான்ஸில் அவனே மிகவுயர்ந்த இராணுவப் புலவனும் தலைவனுமாக விளங்கினான். இந்தப் பெத்தான், கோலின் திறமைகளை வியந்து, பாரிஸுக்கு வரவழைத்து, தேசியப் பாதுகாப்பு சபையில் அவனை மந்திரியாக்கினான். 1934-ல் "வருங்காலச் சேனை" என்றோர் அரிய நூலை மந்திரி கோல் வெளியிட்டான்; அந்நூலில், "பிரான்ஸ் இனிவரும் போரில் எப்படி நடந்துகொள்ளவேண்டும்; அதற்கு என் னென்ன முஸ்திபுகள் செய்ய வேண்டும்" என்பதையெல் லாம் விளக்கினான். அந்நூல் உலகப்புகழ் பெற்றது. ஹிட் லர்கூட அதைக்கேட்டுத் திடுகிட்டு வியந்தான்! "இந்த நூலை எழுதியவன், பிரான்ஸை நிகரற்ற இராணுவ சக்தி யுடையதாக்கி விடுவானே. பிறகு நமது மெயின் காம்ஃப் கனவு பலிக்காதே" என்று அவன் அஞ்சினான். டாங்குக் கலையில் நிபுணனான கோல்; பல புதிய யோசனைகள் கூறி யிருந்தான். ஹிட்லர், அவற்றை உடனே தன் ரகசியப் படைக்குப் பயன் படுத்திக்கொண்டான். கோல், பிரான் ஸைச் சுற்றிப் பார்த்தான்; ஜெர்மனியைப் பார்த்தான்; ஹிட்லர், பிரான்ஸை அடியோடொழிக்கச் செய்யும் இரா ணுவ முஸ்திபுகளை நன்கறிந்தான்; பெத்தானிடம் முறை யிட்டான். பிரெஞ்சு மந்திரி சபை, மாழினோ (Maginot) அரண்கட்டிப் பதினாயிரம் யந்திர வீரரைக் காவல் வைத்து, "இனி எமன்கூட நமது நாட்டில் நுழைய முடி யாது" என்று மார் தட்டியது. ஜெர்மனியிலிருந்த பிரெஞ்சு ஸ்தானிகன் ஒரு சமயம் ஜெர்மன் மந்திரி ரிப்பன்ஸ்ட்ரா பிடம் விளையாட்டாகவே 'மாழினோ அரணைப் புகழ்ந்து, "இனி, ஜெர்மன் பாய்ச்சல் பலியா" தென்றான். "ஜெர்ம னிக்குப் பாய வேறோர் இடமுண்டு. மாழினோ அரணை நாங்கள் அஞ்சவில்லை. உங்கள் இராணுவப் புலிக்குப் அது தெரியும்" என்றார் ரிப்பன்ஸ்ட்ராப்! "இராணுவப்

புலியா? யார்?" என்று கேட்டான் பிரஞ்சுப் பிரதிநிதி. "தெரியாதா? அந்த மகாசூரன் சார்லெஸ் தெ கோல்" என்முன் ரிப்பன்! ஜெர்மனிக்கு ஒரே ஆளிடந்தான் பயம்— கோல்! தெ கோல், 'என்னருமை நாட்டீர்! கவனம்; ஹிட்லர் பாய்ச்சலில் நிற்கிருன். நாம் மாழினோ அரணை நம்பித் தூங்குகிருேம். நாஜிகள் பெல்ஜியம் வழியாக உள்ளே வரப்போகிருர்கள். அந்தப் பக்கம் பாதுகாப்பில்லை; உடனே டாங்குகள் செய்யுங்கள். மேலும், ஜெர்மன் புலிகள் சரியான டாங்குகளால் நம்மை நசுக்குவார்கள். டாங்குகள் ஏராளமாகச் சேருங்கள். இது விமான யுத்தம். ஏராளமான ஆகாய விமானங்களைச் செய்யுங்கள். படை மட்டும் போதாது; போர்த் தந்திரமுந் தெரியவேண்டும் இன்ன தந்திரத்தால் எதிரியை வெல்லலாம்' என்று ஓயாமல் நாட்டிற்கும் மந்திரி சபைக்கும் சொல்லி வந்தான். மந்திரி வேகாண்டு முதலியோர், "மாழினோ உள்ளது; யாரும் கிட்டவர முடியாது" என்ற பல்லவியே பாடிக்கொண் டிருந்தார்கள்.

## ௬. குழப்பம்

வாளும் துப்பாக்கியும் பீரங்கியுங் கொண்டு போர் புரிந்த நெப்போலியன் காலம் போய்விட்டது இந்தக் காலப் போர், தரை கடல் ஆகாயம் மூன்றிலும் நடக்கும். விமானங்கள் திடீரென்று வரும்; குண்டுகளைச் சண்டமாருதமாகப் பொழியும். அவற்றைச் சுட்டுத் துரத்தவேண்டும். மின்வெட்டுக்கு மின்வெட்டுத் தரவேண்டும். தரையில் கண்ணிகள் வைத்து எதிரியைத் தூக்கி யடித்தல்வேண்டும். டாங்குகள், பீரங்கி முழக்கத்துடன் வரும். அவற்றை எதிர்க்க டாங்கு முறிகள் வேண்டும். பகைவனைத் தூரத்திலிருந்தே தீட்டும் பறவைக் குண்டுகளும் இராக்ஷஸ பீரங்கிகளும் வேண்டும். பெரிய பெரிய ஆவிக் கப்பல்கள் போர்புரியவும்,

உணவுப் பொருள்களைக் கொண்டு போகவும் வேண்டும். எதிரியின் நீர்மூழ்கி திடீரென்று வரும்; காந்தக்கண்ணி கள் கப்பலை இழுத்து ஆழ்த்தும். பாதுகாப்புடன் செல்ல வேண்டும். மோட்டார், ரயில், சகடைகள் எல்லாம் காற்ருய்ப் பறந்து, படைகளுக்கு மருந்தும் உணவுந் தரவேண்டும். ஒரு நிமிஷம் தாமதமானல் மோசம்! நீண்ட தயாரிப்பும், திறமையான சாதனங்களுமில்லாமல் போர் தொடுத்தால் தோல்விதான் சரியான இயந்திரங்களில்லாமல் சும்மா ஆட்களை மட்டும் அனுப்பினல், ப்லிக் கடாக்கள் போல் மடிய வேண்டியதுதான்.

ஆங்கிலேயரின் காவல் இருந்தபோதே ஜெர்மனி தந்திரமாகப் போர்க் கருவிகளைச் சேர்க்கத் தொடங்கியது. 1930-ஆம் ஆண்டு ரைன்லாந்தை விட்டு ஆங்கிலேயர் ஜெர்மனிக்கு விடுதலை தந்து சென்றதும், ஹிட்லர்ப் பாம்பு படமெடுக்கத் தொடங்கியது. ஓரிடம் ஆணி, இன்னேரிடம் தகடுகள், மற்ருேரிடம் வில்லுகளாக ஆங்கங்கே இயந்திர சாதனங்களைச் சேர்த்து வைத்து, அனைத்தையும் ஓரிடத்தில் கொண்டுவந்து பூட்டிப் பல்லாண்டுகள் போர் செய்யப் போதிய கருவிகளை ஹிட்லர் சேமித்தான்; பிறகு நாஜி ஜெர்மனிக்குப் போர்வெறி யேற்றி, நாட்டையே இரத்த வெறிபிடித்த புலிக்காடாக்கினன்; ஆரியச் செருக்கு, நார்டிக் சாதித் திமிர், யூதப் பகை, இரத்தத் தாகம், போர்த் தினவு, மண்ணுசை இவற்றை ஏற்றினன்; வெர்சேல்ஸ் உடன்படிக்கையால் ஜெர்மனி பட்டபாட்டை ஜனங்களுக்கு நினைப்பூட்டிப் பிரான்சைப் பழிவாங்க முனைந்தான்; ஆஸ்திரியா ஜெக் நாடுகளை விழுங்கினன்; பிறகு, முதற்போரில் இழந்த காலனிகளைக் கேட்டான்; முதலில் "டான்சிக்கைத் தா" என்ருன். முன்னே நாஜி ஹிட்லரை அஞ்சி மூனிச் ஒப்பந்தம் செய்து கொண்டு சமாதானமாக்ப் போன முதன் மந்திரி சேம்பர்லேனும் பொறுமையிழந்து, "ஹிட்லரே, இத்துடன் நில்"

என்றார். குண்டுக் கிடங்கில் செய்து குவித்த வெடி மருந்து களுக்கு வேலை வேண்டுமே. ஹிட்லர் டான்சிக் துறைமுகத்தைத் தாக்கிப் போலாந்தைப் படையெடுத்து வார்ஸாவையும் பிடித்தான். இச்சமயம் தனது பரம சத்துருவான சோவியத் ரஷ்யாவுடன் அவன் உடன்படிக்கை செய்து கொண்டதுதான், பெரும் வியப்பு! ஸ்டாலின் சோவியத் குடியரசின் அமைதியைக் கலைக்க விரும்பவில்லை. நாஜி ஹிட்லருக்குப் பொற்குவியலும் அளித்துச் சமாதானஞ் செய்துகொண்டு, தனது காரியத்தைப் பார்த்தான். ஸ்டாலின், ஹிட்லரின் அந்தரங்கத்தை அறிந்தே தந்திரமாக அவனை ஒழிக்கச் சமயம் பார்த்திருந்தான். ஜெர்மனியுடன் அவனும் போலந்தை அப்புறமிருந்து தாக்கிப் பாதி கொண்டான்.

மூன்றே வாரத்தில் போலந்தை மடக்கிய ஹிட்லர், "இனி எனக்குப் போராசை கிடையாது; சமாதானமாயிருப்போம்" என்று வெளிக்குப் பேசிக்கொண்டே தாக்காட்டி, உள்ளே ஏராளமான விமானப்படைகளையும் கண்ணிகளையும் தயாரித்தான். மாழினோ அரணுக்கும் ஸிக்ப்ரிட் அரணுக்கும் இடையே கொஞ்சநாள் குண்டுச் சத்தமில்லாதிருந்தது. பிரெஞ்சுப் படைத் தலைவன் காமெலின், "மாழினோ அரணைத் தாண்டி ஹிட்லர் வரவே முடியாது" என்றான். உலகெல்லாம் ஹிட்லர் பிரான்ஸில் அடிவைக்க முடியாதென்றே கருதியது.

## எ. பிரான்ஸின் வீழ்ச்சி

நாஜிப் படைகள் ஒருநாள் இராக்ஷஸ பீரங்கிகளும் டாங்குகளுங் கொண்டு ஊழிவெள்ளம்போலக் கிளம்பி வந்தன. பெல்ஜியம் எதிர்த்தது. நாஜிப்படை, அதைத் தாக்கியெறிந்து, பசித்த புலிபோலப் பிரான்ஸின் மேற்பாய்ந்து, கடலோரமாக முன்னேறியது. டங்கர்க்கில்

கடும்போர் நடந்தது. அதில் பிரான்ஸிற்கும் இங்கிலாந்திற்கும் ஏராளமான படையும் படைக்கலமும் சேதமாயின. 'தப்பினேன், பிழைத்தேன்' என்று இங்கிலாந்து டோவருக்குச் சென்றது! பிரான்ஸ் பின்தாங்கிச் சென்றது. 42,000,000 பிரெஞ்சுக்காரர் உள்ளமும், நாட்டின் கதியையும் விதியையும் நினைத்துத் துடிதுடித்தது. தளவாய் கோல் சொன்ன வழியாகத்தான் நாஜிப்படை புகுந்தது; மாழினோ அரண் வீணானது. "ஐயோ! தளவாய் கோலின் சொல்லைக் கேளாது போனோமே," என்று வேகாண்டு, லேப்ரன் முதலிய தலைவர்கள் வருந்தினார்கள். காமெலின் பதறிப் போனான். இப்போதும் தளவாய் கோல், "பாரிஸை நோக்கிப் படை திரண்டு போர் புரியுங்கள்" என்றான்; விமானம் அனுப்பச் சொல்லி அமெரிக்காவைக் கெஞ்சினான். ஜெர்மன் படை பெல்ஜியத்தில் அல்பெர்ட் வாய்க்காலைத் தாண்டியதுமே, கோல் பிரான்ஸின் தலைவிதியைத் தீர்மானித்துத் தன்னைத் தயாராக்கிக் கொண்டான். அல்ஸாஸ் லோரேன் பக்கம் அவனை பிரெஞ்சுக் குடியரசு அனுப்பியிருந்தது. "இங்கே இருந்தென்ன? எல்லாப் படைகளையும் காலே—பாரிஸ் மார்க்கத்தில் குவியுங்கள்" என்றான் கோல். காமெலின் கேட்கவில்லை. காமெலின் அடங்கினான்; பிறகு வேகாண் டெழுந்தான். தளவாய் கோல் மறுபடியும் படைத் தலைவரைச் சந்தித்து, நிலைமையைச் சொல்லி, போதிய டாங்குகளும் விமானங்களும் தந்தால் பகைவரை வீழ்த்தலாம் என்றான். கேட்டவை கிடைக்கவில்லை. இருக்கிற படையைக்கொண்டு அவன் லுவான் போர்க்களத்தில் தைரியமாக நின்று, ஜெர்மன் படையை இரண்டு தடவை திகைத்துப் பின்னோடச் செய்தான். வேகாண்டு கூட கோலின் வீரத்தைப் புகழ்ந்தான். நாஜிப்படை பலமான டாங்குகளுடன் ஊழித்தீ கக்கி முன்னேறியது. கோலுக்குப் போதிய டாங்குகளோ விமானங்களோ இல்லை. என்றாலும், அவன் முடிந்த

மட்டும் பகைவர் திகைக்கப் போர்தந்து, ஏராளமான வரைச் சிறைப்பிடித்தான்; பகைவர் டாங்குகளைக் கைப் பற்றித் தனக்குப் பயன்படுத்தினான்; அப்பே வில் என்ற இடத்திலும் பகை வெள்ளத்தைத் தேக்கி முதுகிட்டோ டச் செய்தான். "இதோடா, கிண்டனுக்கு முண்டனு யிருக்கிறான்" என்று ஜெர்மன்படை, கோலின் கண்ணிற் படாமல் மற்றொரு வழிகண்டு விரைந்தது. கோல் அதை யும் மறித்தோட்ட முன்னின்றான். ஆனால் இந்தச் சமயம் பிரெஞ்சுக் குடியரசுக் கட்சிகளில் பேத முண்டாயிற்று. பிரான்ஸில் இடதுசாரி, வலதுசாரி, நடுக்கட்சி என்ற மூன்று கட்சிகளுண்டு. இச்சமயம் மூன்றிற்கும் வேறுபாடு கள் பலமாயின. ரேனோ இப்போது தலைவனாயிருந்தான். அவன் தளவாய் கோலைப் போர்முனையினின் றழைத்து யுத்த சபையின் துணைக் காரியதரிசி யாக்கினான். ரேனோவுக் கடுத்தபடி அதிகாரம்பெற்ற தலைவன், பெத்தான். "ஜெர் மனியை நாம் வெல்லமுடியாது; நம்மிடம் படையில்லை, ஆயுதமில்லை. நாம் இணங்கிப் போவதே நல்லது. ஆங்கி லேயர் நமக்குத் துணை செய்யமாட்டார்கள். அவர்கள் சம்பந்தத்தை நீக்கினாலே, ஹிட்லர் மகிழ்ந்துவிடுவார்" என்றொரு தோல்வி மனப்பான்மையைக் கிளப்பிக் கட்சி சேர்த்து ஹிட்லரைச் சரண்புக, பிரான்ஸைத் தூண்டி னான், பெத்தான். தாய்நாடு ஆபத்திலிருக்கிறது. கோல், "தோல்வி மனப்பான்மை கூடாது. நமக்கு ஜெர்மனியை விட வீரமும் போர்த்திறனும் உண்டு. இங்கிலாந்தும் அமெரிக்காவும் நமக்கு விமானமும் டாங்கும் உதவினாலே போதும்; நான் போரில் வெற்றி காட்டுவேன்" என்றான். பெத்தான் கட்சி அவன் பேச்சை ஒப்பவில்லை. ரேனோ, "நல்லது நீ உடனே லண்டனுக்குச் சென்று சர்ச்சிலைக் கண்டு பேசி வா" என்றனுப்பினான். கோல், லண்டன் சென்று சர்ச்சிலைக் கண்டான். சர்ச்சில் தம்மால் இயன்ற உதவியை வாக்களித்து, சண்டையை நடத்தவே மன்றாடிச்

சொன்னர். கோல் இச்செய்தியைக் குடியரசுத் தலைவன் ரேனேவிடம் சொன்னன். ரேனே தைரியமாகப் போராடவே நினைத்தான். ஆனல் இதற்குள் நிலைமை மாறியது. நாஜிப்படை பாரிஸ்முன் பீரங்கியைத் திருப்பி நின்றது. பாரிஸ் காலியாகி, ஜெர்மானியர் கையிற் சிக்கியது. 'சரித்திரத்திலேயே மிக்க துக்க சம்பவம், இதுதான்' என்று உலகே திடுக்கிட்டது. ரேனே முதலிய பிரெஞ்சுத் தலைவர்கள் தூர் என்னுமிடத்தில் கூடிப் பேசினர். அங்கே சர்ச்சிலும் வந்து போரை நடத்தும்படி தூண்டினர். ஆனல் சரணுகதி மனப்பான்மையே தலைவரிடம் குடி கொண்டது. குடியரசுக் காரியாலயம் போர்டோவுக்குச் சென்றது. இச்சமயம் ரேனே கோல் முதலியோர் விமானங்கள் உதவும்படி ரூஸ்வெல்ட்டுக்குத் தந்தி கொடுத்தனர்; சரியான பதில் வரவில்லை. இதற்குள் ரேனே ராஜிநாமாச் செய்துவிட்டான். பெத்தான் ஆட்சித் தலைமை வகித்து, பிரான்ஸைப் படுகொலையினின்றும் காக்கப் போவதாக முன் வந்தான். அவனை லவால் முதலிய தேசத்துரோகிகள் போற்றினர்கள். சுதந்தர வீரர்கள் மறுபடியும் கோலின் தலைமையில் லண்டனுக்குச் சென்று சர்ச்சிலைக் கலந்து கொண்டனர். சர்ச்சில், "பிரான்ஸை இங்கிலாந்தின் கூட்டரசாகச் செய்க; அதன் கப்பல் விமானப் படைகளையெல்லாம் பிரிட்டன் கையிற் கொடுத்து விடுக; பிறகு, நாங்கள் போரைத் தொடர்ந்து நடத்திக் குடியரசைக் காக்கிறோம்'' என்றார். இச்செய்தியைக் கொண்டு வருவதற்குள் பிரான்ஸின் விதி தீர்மானிக்கப் பெற்றது; பெத்தான் மாட்ரிட் தூதர் மூலம் ஹிட்லருடன் சமாதானம் பேச உடன்பட்டான். இச்சமயம் இத்தாலியும் மறுபக்கம் பிரான்ஸைத் தாக்கவே, வேறு வழியேயில்லாமல் நாகரிக ராணியான பிரான்ஸ், நாஜி முரடரிடம் சரண் புகுந்தது. பெத்தான், ஜெர்மன் கமாண்டர் கெய்தால் முன்னே நின்றான். அதே இடத்திலிருந்துதான் சென்ற

போரில், தளவாய் ஃபோக் (Foch), ஜெர்மானியரின் சரணு கதியைப் பெற்று, வெர்சேல்ஸ் உடன்படிக்கையைத் தீர்மானித்தான். ஜெர்மனி சரியானபடி பழி வாங்கியது. வெர்சேல்ஸைக் கைப்பற்றி அங்கேயே அந்த உடன் படிக்கையைக் கொளுத்தி யெறிந்தது; வெர்டனில் தன்னை முறியடித்த பெத்தானே, தன்முன் மண்டியிட்டுச் சமா தானப்பிச்சை கேட்கச் செய்தது! விதி, விதி! பிரான்ஸ் வீழ்ந்தது! எல்லாம் ஒரே வார நாடகம்!

## அ. வெட்கங்கெட்ட ஒப்பந்தம்

1940, ஜூனில், நாஜி ஜெர்மன் ரீஷூம் பாஸிஸ இத்தாலியும் பிரான்ஸை அடியோடொழித்துத் தமது ஆதிக்கத்தை நாட்டச் சமாதான உடன்படிக்கை விதிகளைக் கடுமையாக விதித்தன: "பிரான்ஸ் உடனே சண்டையை நிறுத்திவிட வேண்டும். அதன் போர்வீரர் ஆயுதங்களை மரியாதையாக ஜெர்மனியின் திருவடியில் வைத்துவிட வேண்டும். பாரிஸ் வரைக்கும் உள்ள வட பிரான்ஸெல்லாம் ஜெர்மன் ஆதிக்கத்தில் இருக்கவேண்டும். தென் பிரான்ஸ் ஜெர்மன் கண்காணிப்பில், பெத்தான் வசமிருக்கலாம். ஜெர்மானியர் ஆதிக்கத்தில் இருக்கும் பிரான்ஸ் அவர்கள் முழு அதிகாரத்தில் நடக்கும். பெத்தானிடம் உள்ள தென் பிரான்ஸில் போர்க் கருவிகளோ மருந்துகளோ செய்யக் கூடாது. எல்லாப் போர் முயற்சிகளும் நிற்கவேண்டும். போருக்குதவும் பொருள்கள் சுரங்கங்கள் தொழிற்சாலைகளெல்லாம் ஜெர்மானியர் கையிலிருக்க வேண்டும். பிரான்ஸின் கப்பல்களெல்லாம் ஜெர்மானியர் பார்வையிலிருக்கவேண்டும். ஜெர்மனிக்கு எதிராக மூச்சுவிடக்கூடாது; ஆங்கிலேயருக்கு அனுகூலமாக எதையும் செய்யக்கூடாது வைக்கக்கூடாது, அனுப்பக் கூடாது. மோட்டார் ரயில் போக்குவரத்து சாதனங்க

ளெல்லாம் ஜெர்மன் கட்டுப்பாட்டி லிருக்கவேண்டும். பகைவரின் விமானம், பிரான்ஸ் வழியே பறக்கக்கூடாது. பிரெஞ்சுக்கார ரிடமுள்ள ஜெர்மன் கைதிகளை உடனே திருப்பித்தரவேண்டும். ஜெர்மானியர் தொழிற்சாலை களில் வேலைசெய்யப் பிரெஞ்சுத் தொழிலாளரை ஏராள மாக உதவவேண்டும். இதே மாதிரி இத்தாலிக்கும் பணிய வேண்டும். பிரெஞ்சுத் துறைமுகங்களெல்லாம் ஜெர்மனி-இத்தாலி கையிலிருக்கவேண்டும். இங்கிலாந்தை முறி யடித்துச் சண்டை நிற்குமட்டும், இந்த உடன்படிக்கையை மீறக்கூடாது."

இத்தகைய அடிமைப் பத்திரத்தில் பெத்தான் கோஷ்டி கையெழுத்திட்டுச் சமாதானம் செய்து கொண்டது! அச்சமாதானம் சாவைவிடக் கொடியது. இந்த உடன்படிக்கையை ஹிட்லரே மீறிச் சில மாதங்க ளுக்குள் பிரான்ஸ் முழுதையும் ஆக்ரமித்துக் கொண் டான்.

இந்த வெட்கங்கெட்ட உடன்படிக்கை பத்திரிகை களில் வராமல் கொஞ்சகாலம் நாணிக் கொண்டிருந்தது! பெத்தான் விஷியில் (Viche) தனது அடிமையாட்சியை நாட்டி, ஜெர்மன் குலாமியாக நடித்தான். உடன்படிக்கை முடிந்ததும் பெத்தான் ரேடியோவில் பிரெஞ்சுலகிற்குப் பேசினுன் :

"என்னருமை பிரெஞ்சுக்காரர்களே! நான் பிரெஞ்சு அரசாட்சியை வகிக்கிறேன். நிலைமையை உத்தேசித்தே நான் ஜெர்மனியுடன் சமாதானம் செய்துகொண்டேன்; வேறு வழியில்லை. பகைவர் கை மிஞ்சிவிட்டது; நம்மிடம் போதிய விமானங்களோ, டாங்குகளோ, போர்க்கருவி களோ இல்லை. ஆதலால் பலசாலிப் பகைவருடன் சமா தானமாகப் போவதே நல்லதென்று இந்தத் தீர்மானம் செய்தேன். ஹிட்லர் நம்மை மரியாதையாகவே நடத்து

வார். நீங்கள் என்னைப் பின்பற்றி அமைதியாக நடந்து கொள்வீர்களாக!"

இதற்கு எதிரிடையாக லண்டன் ரேடியோவிலிருந்து ஒரு கர்ஜனை கேட்டது! "என்னருமை பிரெஞ்சுக்காரர்களே! நான் சுதந்தர பிரான்ஸின் தலைவனாகப் பேசுகிறேன். மார்ஷல் பெத்தான்,—வெர்டன் வீரன், முதிய அனுபவமுள்ள இராணுவச் சிங்கம்,—நமது அருமை நாட்டை ஹிட்லருக்குப் பணயம் வைத்துச் சமாதானச் சூதாடிவிட்டான். பிரான்ஸ், இந்த அவமான உடன்படிக்கையை எதிர்க்கவேண்டும். பிரான்ஸ் இந்த உலகப் போரில் ஒரு சண்டையில் தளர்ந்தது. ஆனால் அது தோற்கவில்லை. போரை நிறுத்த அவசியமேயில்லை. நமக்கு இன்னும் வீரப்படையும் படைக்கலங்களும் கப்பல்களும் உண்டு. பிரிட்டனின் பெருந் துணையுண்டு. அமெரிக்காவும் தக்க சமயத்தில் உதவும். நமக்கு ஏராளமான காலனிகள் உள்ளன. ஆப்பரிக்காவில் போர்ச் சாலைகளை நாட்டி வேண்டிய ஆயுதங்களைச்செய்து, எதிரியை ஒருகை பார்க்கலாம். ஆராயாமல் பெத்தான் தேசத்தை ஹிட்லர்கையில் கொடுத்துச் சரணடைந்தது, ஆகாத காரியம். மானமுள்ள பிரெஞ்சுக்காரர் எதிர்த்துப் போரிடுங்கள்; பகைவருக்கு இணங்காதீர்கள். தேசமே பெரிது, மானமே பெரிது. பிரெஞ்சு ரத்தத்தில் ஊறிய சுதந்தர உணர்வின் பெயரால், ழீந்தார்க்கின் பெயரால், போர்புரிந்த பகைவரை எதிருங்கள். நமது சுதந்தரக் கொடி மீண்டும் வானளாவப் பறக்கப்போகிறது. வீரர், படைத்தலைவர், எஞ்சினீயர்கள், விஞ்ஞானிகள், இயந்திர நிபுணர்கள், சிற்பிகள், விமானிகள், மாலுமிகள், ஊழியர் அனைவரும் வாருங்கள். நான் லண்டனில் சுதந்தர பிரெஞ்சுச் சங்கம் நாட்டியிருக்கிறேன். வந்து சேருங்கள்: நான் பிரான்ஸை சுதந்தரத்திற்கு நடத்தி, மீண்டும் குடி-

யரசை நிலைநாட்டுவேன். பிரெஞ்சுக்காரர்களே! சுயமரி யாதையைக் காப்போம்...வாருங்கள்."

இந்தச் சிம்ம கர்ஜனை செய்த வீரனே, தளவாய் கோல். ரேடியோவில் அவன் பேச்சை நான் அடிக்கடி கேட்டதுண்டு. எளிய நேரிய நடையில், உரத்த குரலில், ஒவ்வொரு வார்த்தையும் மனதில் அழுந்தும்படி அவன் கர்ஜிப்பான்.

## ௯. விடுதலை முயற்சி

போர்டோவில் சரணாகதிப் பேச்சு எழுந்ததுமே கோல் ரகசியமான நண்பருக்குப் புரட்சியுணர்ச்சியைத் தூண்டிவிட்டு, வேகமான விமானத்தில் லண்டனுக்குச் சென்றான். நாஜிப் படைகள் அவனையே குறிவைத்துத் தேடின; சிக்கினால் சிறைதான். கோல் தன் ரகசியக் கடிதங்களையும் சாமான்களையும் ஆயுதங்களையும் ஒரு செம்படவன் வீட்டிற் புதைத்துவிட்டு, அப்படியே கிளம்பிவிட்டான். கையில் ஒரு தோற்பெட்டி, அதில் மாற்றுடை, தன் குடும்பப் படம் — இவ்வளவுதான்; வேறு பணங் காசில்லை. மனோதைரியத்தைக்கொண்டு, சுதந்தர வீரன் லண்டனில் வந்திறங்கினான். கோலுக்கு ஆங்கிலம் வராது. பிரெஞ்சிலேதான் அவன் பேசித் தனது பெரிய எண்ணத்தைப் பிரசாரம் செய்யவேண்டும். சுதந்தர தாகமும் மனோதைரியமும் உலகில் எவ்வளவு பெரிய தியாகத்தையும் தீரத்தையும் காட்டுமென்பதற்கு அவன் வாழ்க்கையே ஒரு எடுத்துக் காட்டாகும்! வெள்ளைக்காரர் தமது தேசவிடுதலைக்கு எப்படிப் பாடுபடுகிறார்கள் என்பதையும் தளவாய் கோல் நமக்குக் காட்டுகிறான்.

கோல் பத்திரிகைக்கு ஒரு கட்டுரை எழுதினான்; அதில் வந்த பணத்தைக்கொண்டு, ரூபன்ஸ் ஓட்டலில் ஒரு

சிறிய அறையை வாடகைக்குப் பிடித்தான். அதில் தனியாயமர்ந்து நீண்டநேரம் சிந்தித்தான். அந்த ஓட்டல், வெஸ்ட்மின்ஸ்டர் அப்பேக்கு அருகிலேதான் இருக்கிறது. அங்கே பிரெஞ்சு தெரிந்த ஆங்கிலத் தூதனை ஸ்பியர்ஸ் வந்தான். கோல் அவனை முன்பே அறிவான். அவனிடம் தளவாய், தன் எண்ணங்களையெல்லாம் சொன்னான். "சுதந்தரம் நமது பிறப்புரிமை; மனிதனுக்கு மூச்சினும் அது முக்கியமானது. பிரான்ஸ் சுதந்தரம்பெற ஆங்கிலேயர் தம்மால் இயன்றதெல்லாம் செய்வார்கள். தாங்கள் உடனே சர்ச்சிலைப் பார்க்கவேண்டும்" என்றான் அந்த நண்பன்.

அன்று மாலையே கோல், சர்ச்சிலைக் கண்டு பேசினான். சர்ச்சில், பிரெஞ்சு நேசன்; கோலின் திறத்தில் நம்பிக்கையும் வியப்புங்கொண்டவன். கோல், "ஐயா! என் உயிர் உள்ளமட்டும் எனது சுதந்தரத்திற்காகச் சண்டை போடுவேன்; நாஜி அரக்கரிடமிருந்து பிரான்ஸை எப்படியாவது விடுவித்தே தீருவேன்; தைரியமிருக்கிறது. பிரான்ஸின் ஆன்மா என் உள்ளத்தில் துடிக்கிறது; எனக்கு ஆங்கில அரசு போதிய ஆதரவு தரவேண்டும்" என்றான்! சர்ச்சில், "ஹிட்லர் நமது பொது விரோதி, உலக விரோதி! அவனை ஒழித்து, அவன் அடிமைகொண்ட நாடுகளை விடுவிக்க எல்லா உதவியும் செய்வேன்" என்று வாக்களித்தார். கோல் மிக்க நன்றி கூறி, உடனே சுதந்தர பிரெஞ்சு சேனையைத் திரட்டத் தொடங்கினான். ஆங்கிலேயர் எதிலும் அளவும் கவனமுமாயிருப்பதுண்டு: சர்ச்சிலும் வாய்ப்பேச்சிற்குப் பிறகு, 10, டௌனிங் தெருவிலிருந்து கோலுக்கு ஒரு ஒப்பந்த அறிக்கையை யுத்த சபை மூலம் அனுப்பினார்.

## ௩௦. சுதந்தர ஒப்பந்தம்

தனி மனிதன் பெரிய சாம்ராஜ்யத்தின் சலுகைபெற்று, சுதேசாதிபதியானது வியப்பே! உலக வரலாற்றில் கோல் ஒருவனே இப்பெருமை பெற்றான். சர்ச்சில் கோலுக்கு எழுதிய கடிதம், ஒப்பந்தம், இவற்றின் கருத்து, பின்வருமாறு:

"அன்புள்ள தளவாய் கோல்!

பிரான்ஸ் விடுதலை பெறவேண்டும், அதற்காக அங்கே புரட்சி நடத்தவேண்டும், இங்கே பெரும்படை கூட்டிப் பகைவரை வீழ்த்தவேண்டும் என்ற தங்கள் ஆர்வத்தை ஆங்கில அரசாங்கம் ஒப்புகிறது. அதற்கான துணை செய்வோம். இந்த விஷயமாக அடியிற்கண்ட ஒப்பந்தத்தை அனுப்பியுள்ளோம். அதில் தாங்கள் கையெழுத்திட்டுத் தங்கள் சம்மதக் கடிதத்துடன் அனுப்பவும்:

1. தளவாய் கோல், தரை, கடல், ஆகாயப் படைகளைச் சேர்க்கலாம். அந்தப் படை நமது பொதுச் சத்துருவான ஜெர்மனியை முறியடிக்கவேயாகும்.

2. இப்படை ஒருக்காலும் பிரான்ஸிற்கு விரோதமாக வாளெடுக்கக் கூடாது.

3. பிரெஞ்சு நாட்டு வழக்கப்படியே சேனை தயாராகலாம். ஆனால் ஆங்கில சர்க்கார் உத்தரவுப்படியே அது இயங்கவேண்டும். அதன் ஆயுதம், ஆற்றல், போக்கு வரவு எல்லாம் ஆங்கில சர்க்காருக்குத் தெரியவேண்டும்.

4. சுதந்தர பிரெஞ்சு சேனைக்குத் தேவையான ஆயுதங்களை, பிரிட்டன் அளிக்கும்.

5. பிரெஞ்சுக் கப்பற் படைகளையெல்லாம் கப்பலுடன் பிரிட்டன் கடல் மந்திரி ஆதிக்கத்தில் வைக்க

டும். பிரெஞ்சுக் கப்பல்கள், பிரெஞ்சு சுதந்தரப் போருக்குத் தாராளமாகக் கிடைக்கும்; அதன் உரிமை பிரான்ஸிற்கே.

6. போருக்காக கோல் ஏராளமான வீரரைச் சேர்த்துப் பயிற்றலாம். வீரர்படைக்கு வேண்டிய சௌகரியங்களை பிரிட்டன் அளிக்கும். இப்படை நமது பொதுப் பகைவரைத் தாக்கி வீழ்த்திப் போர் வெல்லுமட்டும் இங்கே ஆதரவு பெறும். படை நடத்தும் பான்மையில் கோல், பிரிட்டிஷ் படைத்தலைவருடன் ஒத்துழைக்கவேண்டும். 1940, ஜுலை முதல்தேதியிலிருந்து இவ்வொப்பந்தம் அமுலுக்கு வருகிறது. இத்துடன் தளவாய் கோலின் சுதந்தர பிரெஞ்சுப் படைச் செலவிற்குச் சிறிது தொகையுள்ளது.

வந்தமட்டும் லாபத்தை வரவேற்று, மேற்கொண்டு லாபந் தேடுதல் ஐரோப்பியரின் தந்திரங்களில் ஒன்று, கோல் சர்ச்சிலின் ஷரத்தை அப்படியே ஏற்று நன்றியுடன் கையெழுத்திட்டான்.

“அன்புள்ள முதன்மந்திரியாரே!

தங்கள் உதவிக்கு நன்றி. ஒப்பந்தத்தை ஒப்புக்கொண்டு கையெழுத்திட் டனுப்பியிருக்கிறேன். சுதந்தர பிரான்சும் இங்கிலாந்தும் இனிக் கைகோத்து நமது பகைவரை முறியடிக்க எல்லா முயற்சிகளையும் செய்க. நான் இப்போது சேர்க்கும் பிரெஞ்சுப் படை, தங்களுக்கு எல்லா உதவியும் செய்யும். ஒப்பந்தப்படியே எல்லாம் நடந்து, பிரான்சு சுதந்தரமாகும் நாளை விரும்புகிறேன்!”

இவ்வாறு கடிதம் எழுதி. கோல் ஒப்பந்தத்தையும், சர்ச்சிலுக் கனுப்பினான். அன்றுமுதல் அவன் ஒரு நிமிஷங்கூட வீணாக்காமல் அல்லும் பகலும் விடுதலைக்கே பாடுபட்டான். ஒருநாள் கோல் தன் அறையில் ஆப்பரிக்காவின் படத்தை விரித்து ஆராய்ந்து கொண்டிருந்தான்.

டெலிபோன் அழைத்தது; கேட்டான்: "நான் குழந்தைகளுடன் பிளிமௌத்தில் வந்திருக்கிறேன்" என்ற செய்தி வந்ததும், "நீயா? சரி! இன்ன வழியாக வந்துசேர்" என்று அறிவித்துத் தன் வேலையிலேயே ஆழ்ந்தான். மறுநாள் கோலின் மனைவி ஈவோன் கோல் குழந்தைகளுடன் வந்தாள். கோல் தன் குடும்பத்தை ஓர் எளிய வீட்டில் வசிக்கச் செய்தான்; உடனே "இப்போது நமது தாய் நாட்டுப் பணியே நம் வாழ்க்கை. அதில் நீங்களும் உடனே கலந்து சேவை செய்யவேண்டும்" என்றான். குடும்பம் தேசப் பணிக்கு எழுந்து நின்றது. மனைவி, கோலின் அணுக்கத் துணையானாள். மூத்த பெண் எலிஜபெத்து நர்ஸ் வேலை கற்றுப் படைகளிற் பணி செய்தாள்; மகன் பில்லிப், கப்பல் வேலையிற் புகுந்தான். கோல் ஊணுறக்க நேரந் தவிர, மற்ற நேரமெல்லாம் பிரான்ஸை விடுவிக்க இராணுவ ஆராய்ச்சி செய்தவண்ணமே யிருந்தான். சுதந்தர தாகங்கொண்ட பிரெஞ்சுக்காரர்கள் அனைவரும் அவனை வந்தடைந்து படை திரண்டனர். ஆயிரம் இரண்டாயிரம் என்று தினந்தினம் வீரர்கள் வந்து குவிந்தனர். கோல், அவர்களை அன்புடன் வரவேற்றுத் தக்க பயிற்சி யளித்தான்.

## கக. நாஜி தர்பார்!

பிரான்ஸில் நாஜிக் கொடுங்கோல் பலமாக நடந்தது.

எங்கும் கெஸ்டபோ (ரகசியப்) புலிகள், இராணுவ வேங்கைகள்; மூச்சுவிட்டால் எமலோகம்; தேசிய கீதம் பாடக்கூடாது; "ஹேர் ஹிட்லர்" திருப்புகழே பாடவேண்டும்! நாலுபேர் சேர்ந்து பேசக்கூடாது. ஆயுதந் தொடக்கூடாது. ஜெர்மனி தரும் சீட்டைக்காட்டி உணவு வாங்கிச் சாப்பிடவேண்டும். ஜெர்மனியாருக்கு உயர்ந்த உணவு நிரம்பக் கிடைக்கும். பிரெஞ்சுக்காரருக்கு மட்டமான

உணவே சிறிது கிடைக்கும். பிரெஞ்சுத் தொழிலாள ரெல்லாரும் ஜெர்மனிக்குக் கடுமையாக உழைக்கவேண்டும். எதிர்த்தால் எமலோகம். ஜெர்மனியைத் தாழ்வாகப் பேசினுல், உடனே துப்பாக்கிக்கு இரையாகவேண்டும்; பொருள்களெல்லாம் பறிமுதல்; நாடு கொள்ளே, வீடு சோதனே! உணவுப் பொருள்களெல்லாம் பெர்லினுக்குச் சென்றன. குளிருக்கு விறகு கிடையாது. மேஜை நாற்காலிகளேப் போட்டெரித்தும் பலர் குளிர் காய்ந்தனர். பிரஞ்சுக்காரர் நரகவேதனேப்பட்டனர். பட்டினியால் இறந்தவர் பலர். சுதந்தரம் பேசி இறந்தவர் பலர். ஐயோ கொடுமை என்று அலறினவர்களுக்குத் துப்பாக்கிச் சனியனே பலனுகும். இந்த எமகண்டத்தைத் தப்பி, எத்தனேயோ பேர் கோலிடம் வந்து படையிற் சேர்ந்தனர். எத்தனேயோபேர் ஆப்பரிக்காவுக்கு ஓடினர். அகப்பட்ட பேர்களே நாஜிகள் இரக்கமில்லாமல் வேலே வாங்கினர்.

இந்த நிலேயிலேதான் கோல் மெல்ல மெல்ல எப்படியோ அங்கே புரட்சி யுண்டாக்குகிறுன். புரட்சி வீரர் ஸ்வில் மலேக்குகையில் ஒளிந்துகொண்டும், பாதாள அறைகளிற் புகுந்தும் நாஜிகளே ஒழிக்கக் கங்கணங் கட்டிக்கொண்டு வேலேசெய்தனர். நூறுக்கு மேற்பட்ட ரகசியப் பத்திரிகைகள் கிளம்பின; அவை இன்று ஓரிடம் அச்சாகும், நாளே வேறிடம்; காலே ஒவ்வொரு பிரெஞ்சுக்காரர் விட்டுக்குள்ளும் இருக்கும். கையெழுத்துப் பத்திரிகைகள் தெருத்தெருவாகப் புரட்சி யியக்கத்தைப் பரப்பும். யாராவது தப்பித்தவறி கெஸ்டபோ கையிற் சிக்கினுல், அவர் குடும்பத்தையே ஓர் அறையில் அடைத்து ஜன்னல் வழியாகச் சுட்டுக் கொலே செய்வர் நாஜிக் கொடியர். நண்பர்போல வந்து கெஸ்டபோக்கள் தாமும் புரட்சிப் பேச்சுப் பேசி ஆட்களேப் பிடித்துத் துப்பாக்கியால் சுட்டுத் தீர்ப்பர். இத்தகைய

ஆபத்துக்களை எப்படியோ தாங்கிச் சுதந்தர வீரர் கோலின் வழியே சென்றுகொண்டிருந்தனர். அவர்களுக் கென்றே கோல் தனி பரிபாஷைகளைச் சிருஷ்டித்தான்.

லண்டன் B. B. C.யிலிருந்து ஒவ்வொருநாளும் பரி பாஷையில் செய்தியும் அறிக்கையும் வரும். அதை நான் தினம் ஐந்தரைமணிக்குக் கேட்டதுண்டு. பரிபாஷைக ளுடன் சங்கேதமான பாடல்கள், பேச்சுக்கள், விகடங் கள் எல்லாம் நடக்கும்: "மிக்கி மௌஸ் நரிவேட்டை யாடுகிறது; கழுகை அன்னம் குறிவைக்கிறது" என்று பரிபாஷையில் பேச்சு நடக்கும். பிரான்ஸில் உள்ள புரட்சிக்காரர் அவற்றைத் தங்கள் ரேடியோவில் கேட்டு, உடனே அக்கட்டளையை நிறைவேற்றி, ரகசிய வழியில் பதில் கொடுப்பார்கள்.

இந்தமாதிரி தாய்நாட்டில் எதிர்ப்பையும் புரட்சியை யும் தூண்டினான், தளபதி கோல். அவன் மூட்டிய புரட்சி யியக்கம், நன்றாக வேலைசெய்துகொண்டிருந்தது. இத னிடையே கோல், காலனிகளிற் கருத்தைச் செலுத்தினான்.

## ௧௨. அடக்கமான வீரன்

தளவாய் தனது தாய்நாட்டை விடுவிக்கச் செய்த சேவை, மனிதசமுதாயம் உள்ள மட்டும் உதாரணமாக விளங்கும். இரவு பகலின்றி அவன் சுதந்தர முயற்சி செய்தான்; உண்ணும்போதும் உறங்கும்போதுங்கூட பிரான்ஸே நினைப்பாயிருந்தான். தளவாய் கோலை நேரே பார்த்து வந்த எனது பிரெஞ்சு நண்பரொருவர், பின் வருமாறு அவனைப்பற்றி வருணித்தார்:

"கோல், சிறந்த வீரர், உயர்ந்த அறிவாளர், மிகவும் அடக்கமானவர். பேச்சைவிடச் செயலையே அவர் விரும் புவார். அவரிடம் படபடத்து அவசரப்படும் துறுதுறுப்

பு கிடையாது. ஒன்றிற் கருத்தூன்றி நிதானமாக நிறைவேற்றி விட்டே, அவர் மற்ருெரு காரியத்திற்குச் செல்வார். ஆத்திரத்தில் பாய்ந்துவிழும் அறைகுறை வேலை அவரிடம் கிடையாது. அவர் காரியமெல்லாம் அழுத்தந் திருத்தமாயிருக்கும். ஒவ்வொரு காரியத்தையும் அளந்து அமைதியாகச்செய்து அவர் வெற்றிக்குப் படியாக்குவார். அவர் பேச்சு, சுருக்க விளக்கமாகவும், தெளிவாகவும், கம்பீரமாகவும் இருக்கும். ஒருதரம் கேட்டால் மறக்க முடியாதபடி அவர் சொற்களைக் கையாளுகிருர். கோல் மிதமாக உண்பார், மிதமாக உறங்குவார், மிதமாகப் பேசுவார்; ஆனுல் அமிதமான தேசாபிமானங்கொண்டு அளவில்லாமல் காரியங்களைச் செய்யார். ஒரு நாள் ஒரு வீரன், "நான் இப்போதே பிரான்ஸில் 'மாறுவேடம்' போட்டு நுழைந்து, புரட்சிக்காருடன் சேர்ந்து, நாஜிகளை ஒழித்துத் தங்களை வரவேற்பேன்" என்ருன். "தம்பி, எளிதாகப் பேசிவிட்டாயே. அங்கேபோய் உயிரைக் கொடுப்பதைவிட, இங்கே யிருந்து சுதந்தரத்திற்கு உயிரான காரியங்களை நிதானமாகச் செய்" என்ருர் தளபதி. மற்ருெரு வீரன் ஒரு போரில் வென்றதும், "ஐயா, வென்று விட்டேன், பிழைத்தோம்; இனி இன்பமே" என்று துள்ளினுன். "தம்பி, துள்ளாதே; நாளை நீ இருப்பது என்ன நிச்சயம்? நாளைப் போருக்கு உன்னை அமைதியாகத் தயார்செய்து கொள்; உற்சாகத்தைக் காரியத்திற் காட்டு ' என்ருர் கோல்."

## கரு. இரண்டு தியாகிகள்

இந்த மாதிரி அடக்கமாகவும் அழுத்தமாகவும் பணி செய்து, தேசத்திற்கே தன்னைப் பலிதானமாக்கிய கோலை,பிரெஞ்சுக்காரர்கள் அனைவருமே மோகங்கொண்டு பின்பற்றினர். புதுச்சேரியில் எனக்குத் தெரிந்த இரண்டு பிரெஞ்சுக்காரர்கள், சுதந்தர பிரெஞ்சு இயக்கத்தில்

கொண்ட உற்சாகமும் செய்த தியாகமும் என் கண்முன் நிற்கிறது! இருவரும் என்னிடம் அடிக்கடி வந்து, பிரான்ஸைப்பற்றிப் பேசினர். "மார்சேய்யேஸ் ஒலிக்குமட்டும் பிரான்ஸின் உயிர் துடித்துக் கொண்டிருக்கும்; மார்சேய்யேஸ் ஒலி அடங்காது!" என்றனர். இருவரும் பெரிய படிப்பாளிகள்; ஸயன்ஸிலும் சரித்திரத்திலும் டாக்டர் பட்டம் பெற்றவர்கள்; ஏராளமான வரும்படியுள்ள உத்தியோகத்தி லிருந்தவர்கள்; குடும்பிகள். கோல் லண்டனிலிருந்து, "வாருங்கள், சுதந்தர வீரர்காள்!" என்றழைத்த மறுநாளே, இருவரும் தமது உத்தியோகத்தை ராஜிநாமாச்செய்து, சுதந்தர விரதங்கொண்டு, கோலின் ஊழியராகத் தம்மைப் பதிவு செய்துகொண்டனர். கோல் அவர்களை ஏற்றுச் சிங்கப்பூருக்கனுப்பி, ஜப்பான் இந்தோச்சீனவை விழுங்காமலும், ஆசியாவில் பிரான்ஸிற்குக் கௌரவம் வரும்படியும் பிரசாரம் செய்யப் பணித்தான். இருவரும் சிங்கப்பூரிலிருந்து கொண்டே சீனம் சையாம் எங்கும் சென்று, பிரெஞ்சுக் கொடியின் பெருமையை நாட்டினர்கள். ஜப்பான் சிங்கப்பூரைப் பற்றிக்கொண்ட பிறகே, இருவரும் ஏகாங்கிகளாகப் படகேறி, ஜாவாவுக்கு வந்து, அங்கிருந்து ஒரு கப்பலில் இந்தியா சேர்ந்து, புதுச்சேரிக்கு வந்து, இங்கே தமது போர் அனுபவங்களை யெல்லாம் சொன்னர்கள். சிறந்த செல்வச்செழிபில் பெருமையாய் இருந்த அந்தப் புலவர்கள், தொப்பிகூட இல்லாமல் ஒரு ஷர்ட்டும், நிஜாருமாக வந்து சேர்ந்த நிலை பரிதபிக்கத் தக்கது. "பணம் பூணிமணி எல்லாம் போய் விட்டன; என்றாலும், தைரியம் போகவில்லை. "எமது தாய் நாட்டில் எத்தனையோ பேர், சோறு, துணி, இடம், இல்லாமல் வருந்துகிறார்கள்; அவருள் நாங்கள் இருவர். இதோ சென்று தாயின்பணியைச் செய்வோம்" என்று இருவரும் மறுவாரமே, ஸிரியாவில் பேரூத்தில் இருந்த தளவாய் கோலைச் சந்திக்கக் கிளம்பினர். கோல் இந்த

வீரரை வரவேற்று, ஒருவருக்கு ரேடியோவிலும், மற்றொருவருக்குத் தன் அலுவல் நிலயத்திலும் வேலைகொடுத்தான். அவர்கள் சென்றதுமே, "சிங்கப்பூரிலிருந்து வந்தீர்களோ? சுதந்தர தாகங்கொண்டுதான் வந்திருக்கிறீர்கள்! சுதந்தர பிரான்ஸின் சேவை செய்யுங்கள்" என்று அழைத்துச் சென்று, "தாங்கள் இங்கே, இன்ன காரியம் செய்யுங்கள். உங்களுக்கு இருக்க, உண்ண இன்ன இடம்" என்று குறித்து, அவர்களுக்கு வேண்டிய சட்டைகளும் சௌகரியங்களும் செய்து கொடுத்தான் கோல். "நாலு பேச்சு, நாற்பது செய்கையானன் தளவாய்" என்று நண்பர் இங்கே எழுதினர்! புதுச்சேரி கவர்னர் லுயி போன்வான், ஒரு பெரிய கூட்டங்கூட்டி, "இப்போது பிரான்ஸில் இரண்டு கட்சியுள்ளது; ஒன்று நாஜிகளின் கைப்பாவையான அடிமைக்கட்சி, பெத்தான் லவால் கட்சி; மற்றொன்று, கோலைப் பின்பற்றும் சுதந்தரக் கட்சி. நமக்கு அடிமைத்தனம் வேண்டாம்; நாஜித்தனமும் வேண்டாம். நமக்குவேண்டியது, பிரான்ஸும் அதன் சுதந்தரமும்; ஆதலால், சுதந்தர வீரனாகிய கோலையே நாம் பின் பற்றுவோம்" என்று பேசினார். பிரெஞ்சிந்தியா முழுதும் கோலின் கட்சியையே சேர்ந்து பணமும் ஆட்களும் அனுப்பியது.

## கச. சுதந்தர நாள்

பிரெஞ்சுக்காரருக்கு உயிர் வேண்டுமா, சுதந்தரம் வேண்டுமா என்பது, 1940 ஜூலை பதினான்காந் தேதி தீர்மானிக்கப்பட்டது. அன்று பிரெஞ்சுக் குடியரசு தினம். ஹிட்லர், "யாரும் சுதந்தரகீதம் பாடக்கூடாது, கூடக்கூடாது, பேசக்கூடாது, எழுதக்கூடாது, சுதந்தர தினங் கொண்டாடக் கூடாது" என்று கடுமையாக உத்தரவிட்டு, கெஸ்டாபோக்களை விடுவிடாகப் போய், சுதந்தர

பிரெஞ்சு நேயர்களை, கோலிஸ்டுகளைக் கண்டு சுடும்படி ஏற்பாடு செய்து விட்டான். கம்ஸ தர்பார் நடந்தது. ஆனாலும் என்ன? பதின்மூன்றாந் தேதியே லண்டனி லிருந்து தளவாய் கோலின் கர்ஜனையை பிரான்ஸ் கேட்டது!

"சுதந்தர பிரெஞ்சுக் காரர்களே! நாட்டை உயிரினும் மதிக்கும் தோழர்காள்! பிரான்ஸ் இன்று நாஜிகளின் பிடியில் வருந்துகிறது. தேசம் வருந்தும் போது, நமக்கு விருந்தும் திருநாளுமில்லை. குடியரசு போனபிறகு, குடியரசு நாள் துக்க நாளே! இந்த நாளில் ஒவ்வொரு பிரெஞ்சுப் பிரஜையும் 'எப்படியாவது தாய் நாட்டை விடுவித்துச் சுதந்தரம் நாட்டுவோம்' என்ற உறுதியைக் கொள்ளவேண்டும். செயலுள்ளவர்கள், ஆற்ற லுள்ளவர்களெல்லாரும் இங்கே வாருங்கள்; சுதந்தரப் படையிற் சேருங்கள். நமது பக்கம நீதியுள்ளது. நமது உள்ளத்தில் சுதந்தரக் கனல் உள்ளது. வெற்றி நிச்சயம். இந்த நாளில் மானமுள்ள பிரெஞ்சுக்காரர் நம்மை நசுக்கும் பகைவருக்குச் சற்றும் தணியாமல், நிமிர்ந்து நின்று போராடுங்கள். எதிரிகளின் கொடுங்கோலை முறித்தெறியுங்கள். அவர்களின் போக்குவரத்து சாத னங்களை மறித்துத் திகைக்கச் செய்யுங்கள். அவர்களுக் காக யாரும் போர்க்கிடங்குகளின் வேலை செய்யாதீர்கள். தோழர்களே! எதிருங்கள், கிளம்புங்கள்; எதிரிகள் பிரான்ஸில் வசிக்க முடியாமற் செய்யுங்கள். வாழ்க சுதந்தரம்! வாழ்க சுதந்தர பிரான்ஸ்! மூாந்தார்க்கின் வீர வெறிகொண்டு போராடுங்கள். ஓங்குக புரட்சி! வெல்க எதிர்ப்பு! வாழ்க சுதேசப்!"

இந்தக் கர்ஜனையைக் கேட்ட பிரெஞ்சுக்காரர், வீடு களிலும் காடுகளிலும் மூலைமுடுக்குகளிலும் கூடிச் சுதந்தர விரதம் பூண்டனர். இங்கே புதுச்சேரியில் அன்று கவர்னர் அரிய சொற்பொழிவாற்றி, "தளவாய்

கோல் பிரான்ஸின் ரக்ஷகன்; அவனுக்கு நம் உடல் பொருள் ஆவியெல்லாம் தருவோம்" என்றார். சுதந்தர சேனைக்குப் பல வீரர் இங்கிருந்து புறப்பட்டு அல்ஜீரியாவுக்குச் சென்றனர்.

வெள்ளைக்காரர்களின் புரட்சியென்றால், வெடிமருந்தின் அதிர்ச்சிதான். கெஸ்டபோக்கள் கண்ணில் பொடியைத்தூவி, சுதந்தர வீரர் ஓசைப்படாமல் சுதந்தரப் பிரசுரங்களைப் பரப்பினார்கள்; ரயில்களையும் மோட்டார்களையும் தகர்த்தார்கள்; கப்பல்களை உடைத்தார்கள். தம்மை அடிமை செய்த அன்னியரைக் கதிகலங்கச் செய்தனர். நாஜி ஒற்றருக்கும் இராணுவத்திற்கும் பலமான வேலை கொடுத்தனர். அதன் பயனாக மனிதவேட்டை நடந்தது. ஒரு நாஜிக் கொலைக்கு, நூறு பிரெஞ்சுக்கொலை நடந்தது. வீடுவீடாக நுழைந்து, சந்தேகப்பட்டவர்களை அப்படியே நாஜிகள் சுட்டனர்; கண்ணைக்கட்டிக் காட்டிற் கொண்டு போய்ச் சுட்டனர். கொலை, கொலை, கொலை! இந்தக் கொலைக் கூத்தையும் பொருட்படுத்தாமல், பிரெஞ்சு சுதந்தரக் கட்சி தன்வேலையைச் செய்தது ஆச்சரியமே! லண்டனிலிருந்து கோல் ரகசியச்செய்திகள் அனுப்புவான். மறு நாளே எப்படியோ பதில் வந்து குதிக்கும்! விஷி சர்க்கார், "ஜெர்மனியே, பிரான்ஸின் கதி மோட்சம்" என்று பத்திரிகை போடும். கோலின் கட்சி, ஒன்றிற்குப் பத்துப் பத்திரிகைகள் அச்சிட்டும்; கையால் எழுதியும் ஜனங்களைப் புரட்சிக்குத் தூண்டும். கெஸ்டபோ, ஒரு பத்திரிகை ஆசிரியரை மோப்பம்பிடித்து வருவான். அந்த ஆசிரியர் மறுநாள் அங்கிருக்கமாட்டார். பத்திரிகை வேறிடத்திலிருந்து ஒழுங்காக வரும். கோலின் ஆள் என்று சந்தேகித்து ஒற்றன் வந்து மெல்ல ஆளைக் கிண்டுவான்: "அண்ணா, சௌக்கியமா? என்ன தயவில்லை. இந்த விஷி சர்க்கார் ஜெர்மனியுடன் சேர்ந்து செய்யும் அட்டூழியம் பொறுக்க முடியவில்லையே; என்ன

அண்ணு, நாமும் சும்மா இருப்பதா? என்ன சொல்லு கிருய்? நாளையே புரட்சி செய்தாலென்ன?" என்று மெல்ல வாயைக் கிண்டுவான். ஆள் "ஆமாங்கிறேன்; செய்வோம் புரட்சி; ஜெர்மன் பயல்களை உதைப்போம்" என்று வாய்தவறிப் பேசிவிட்டாலோ, "அது தான் அண்ணே! இப்போதே வா" என்று அழைத்துச் சென்று, விலங்கு மாட்டிக்கொண்டு போய்க் கடினமான வேலையிற் போடுவான்; அல்லது ஆளையே ஒழிப்பான் நாஜி ஒற்றன். மற்ெருரு எத்தன் வருவான்: "தம்பி, ஜெர்மன் அநியாயம் பொறுக்கமுடியவில்லை. நாம் லண்டனுக்குப்போய் கோலுடன் சேர்ந்துகொள்வோம், வா" என்று மெல்லப் பேச்சைத் தொடங்குவான். ஆள் அந்தப் பசப்பில் மயங்கித் தனது நண்பருடன் இரவில் படகேற வருவான்; ஒற்றன் சரியான போலீஸ் காவ லுடன் வந்து, எல்லாரையும் பிடித்துக் கொண்டு போவான்! ஒரு குடும்பத்தில் ஒருவர் கோலுடன் சேர ஓடிப்போயிருப்பார்; குடும்பத்துடன் தண்டனை தான்! கோலைப்பற்றிய ஏதாவது அறிக்கை, பத்திரிகை, புத்தகம் வைத்திருந்தால், உடனே கெஸ்டபோ ஆளைப்பிடித்து ஜெர்மனிக்குத்தள்ளி, கடுவேலையிற் போடுவான்.

ஜெர்மன் அடிமையான விஷி சர்க்கார், தளவாய் கோலுக்கு மரணதண்டனை விதித்தது! அதைக் கேட்டதும் கோல், லண்டன் ரேடியோவில் கர்ஜித்தான்: "எனது கட்சி நியாயம் என்று உலகெல்லாம் ஒப்புகிறது; காலனிகளெல்லாம் எனக்குப் பலமான ஆதரவளிக் கின்றன. ஆப்பரிக்கா முழுதும் என்பக்கம் இருக்கிறது. விஷியில் நடக்கும் போலியரசு எனக்கு மரணதண்டனை விதித்திருக்கிறது! பார்க்கிறேன். உண்மைக்கு வெற்றி யுண்டானுல், லோரேன் சிலுவைக்கு வெற்றியுண்டானுல், சுதந்தர சக்திக்கு என்றும் வெற்றி யுண்டானுல், எனது முயற்சிக்கும் வெற்றி உண்டாவதுறுதி! இப்போது

லண்டனிலிருந்து பெத்தானுக்கே பேசுகிறேன். என் னருமை மார்ஷல் பெத்தானே! எனக்கா மரண தண்டனை?. சந்தோஷம்! என் விரதம் பலித்து, நான் பாரிஸில், நான்காவது குடியரசை நாட்டுவேன். அப்போது நாட்டைக் காட்டிக்கொடுத்த துரோகிகளுக்கு மரணதண்டனை கிடைக்கும்...பாரும்! நாட்டைப் போற்றிய வீரருக்கு அன்றே வெற்றி விருந்து நடக்கும்" என்றான்! இந்த மாதிரி கோல், பேச்சும் செய்கையுமா யிருந்தான்.

## கரு. ஆப்பரிக்காவில் பெரிய காரியம்

கோல், ஹிட்லரின் சூழ்ச்சிகளை நன்குயறிவான். எத்தனுக்கு எத்தன் இவனே. பிரிட்டிஷாரை வெல்ல ஹிட்லர், முதலில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளைக் கைப் பற்றத் தொடங்கினான்; எங்கெங்கே பிரிட்டிஷ் கொடி பறக்கிறதோ, அங்கங்கெல்லாம் எதிர்ப்பைத் தூண்டினான்; பசிபிக் இந்துமகா சமுத்திரங்களில் ஜப்பானைத் தூண்டி விட்டுப் போர்செய்தான்; மற்ற இடங்களில் இத்தாலி பிரான்ஸ் இரண்டையுந் தூண்டிவிட்டான். இதேமாதிரி பிரான்ஸிலேயும் முற்றிலும் அடிமைசெய்ய அவன் காலனி களில் கைவைத்தான். இந்தப் போரின் வெற்றிக்கு ஆப்ப ரிக்கா முதன்மையானது என்பதை அறிந்தான் ஹிட்லர். அவனுக்கு முன்பே, கோல் அதையறிந்து, தனது நாட்டத் தை ஆப்பரிக்காவில் செலுத்தினான். ஸிரியா, அல்ஜீரியா, எகிப்து, மொராகோ, கிழக்காப்பரிக்கா, நடுக்கோட்டாப் பரிக்கா, (நடுக்கோடு = Equator) முதலிய இடங்களெல் லாம் பிரெஞ்சுக்காரருடையது. விஷிசர்க்கார் இந்த இடங்களைப் பிடிக்கப் படைகளை ஏவியது. ஸிரியாவில் கலகம் தொடங்கியது. கோல் தனது படைகளைக் கொண்டு ஸிரியாவைப் பிடித்து, டெமாஸகஸில் ஊன்றிக் கொண்டு, சூயஸ் கால்வாய்ப் பக்கம் பகைவர் தலை

காட்டாமல் அடித்தான்; பிறகு காங்கோ அல்ஜீரியா மொராகோ நாடுகளில் சுதந்தரப் படை கூட்டினன்; பிராஜாவில் (Brazzaville) என்ற பெரிய துறைமுகத்தில் தனது தளவாடங்களை நாட்டினன். காங்கோவில் ஏராளமான மரங்களும் தாதுப்பொருள்களும் கிடைத்தன. அவற்றைக் கொண்டு, போருக்கு வேண்டிய கருவிகளையெல்லாம் நிரம்பச் செய்து சேர்த்தான். உலகெங்குமிருந்து ஏராளமான பிரெஞ்சுக்காரர் வந்து படைசேர்ந்தனர். அவர்களையெல்லாம் கோலே, நேரே பழக்கினன்; அல்ஜீரியாவில் தனது அலுவற்கூடத்தை நாட்டி. நேச நாடுகளுடன் ஒத்துழைத்தான்; பகைநாடுகளின் இடுப்பை ஒடிக்கச் சூழ்ச்சி செய்தான்; சுதந்தரப் பிரெஞ்சுச் சங்கத்தைப் பலப்படுத்தினன்.

இக் காரியங்களில் கோலுக்கு அணுக்கத் துணைவராக அரிய நண்பர்கள் வாய்த்தனர் :

1. கோலின் நண்பருள் மிகச் சிறந்தவர், தளவாய் காத்ரு என்பவர். காத்ரு நிரம்பப் படித்து இராணுவ நிபுணராகிப் பல போர்முனைகளைக் கண்டவர்; முதல் ஜெர்மன்போரில் எதிரிகளைப் பலமாகத் தாக்கியவர்; கைதியாகி நாலைந்துதடவை தப்பிச் செல்ல முயன்றவர். அச்சமயமே கோலுக்கு இவர் அரிய நண்பரானர். பிரெஞ்சுக் குடியரசிற்கு இவர் ஒரு தூண் போன்றவர். ஸிரியா, மொராகோ, இந்தோச்சீன முதலிய நாடுகளில் இவர் கவர்னராயிருந்தார். பாரிஸ் பிடிபட்டதும் போர்டோ சர்க்கார் இவரை இந்தோச்சீனவிற்குச் சென்று தனக்குச் சாதகமாக வேலைசெய்யச் சொன்னது. அன்றிரவே காத்ரு, லண்டனுக்கு வந்து கோலுடன் சேர்ந்துகொண்டார். கோல் நம்பிக்கையுள்ள இந்த நண்பனை, ஸிரியா கவர்னராக்கினன். பேருந்திலிருந்து காத்ரு, கோலுக்கு அரிய பெரிய காரியங்களில் துணை நின்றார்.

2. தளவாய் லெமாந்தியோம் பெரிய ராணுவ வீரர்; காலனிகளில் இருந்தவர்; ஆர்சிபால்ட் வேவலுடன் ஆப்பரிக்காவில் வாட்பணி செய்தவர்; சென்ற போரில் ஜெர்மன் கைதியாகி மீண்டவர்; ஜெர்மனியான் குட்டை நன்குயறிந்தவர். ஆப்பரிக்காவைக் கைப்பற்றுவதிலே தான் பிரான்ஸின் வெற்றி யிருக்கிறது என்று கண்டு, இவர் அங்கே கண்ணுங்கருத்துமா யிருந்து, கோல் கட்சிக்குத் துணைசெய்தார். ஸிரியாப்போரில் இவர் பெரும்பங்கு கொண்டார். குண்டுபட்டுக் கை முறிந்தும், மனம் ஒடியாது கடமையைச் செய்த தீரர், இவர்!

3. தளவாய் லார்மினுன் என்பவர் போரிற் சிறந்த வீரர்; நாடே உயிரென்பவர்; இத்தாலியரை முறியடிக்க ஆப்பரிக்காவில் பெரியவேலை செய்தவர்.

4. சென்ற பெரும்போரின் தனிப்பெரும் வீரராக விளங்கிய மார்ஷல் ஃபோக்கின் மகள் வயிற்றுப் பிள்ளை யான காப்டன் ஃபோக் என்பவர் கோலுக்குச் சுறுசுறுப்பாக உதவி செய்தவர்.

5. அட்மிரல் முஸெலியே என்பவர், சுதந்தர பிரான்ஸின் கடற்படையை நடத்தினுர். இவர் நீண்ட கப்பலனுபவமும் வெற்றிவீறும் படைத்தவர்.

6. தளவாய் மீரோ என்பவர், கோலைப்போலவே அசகாயசூரர். ஜெர்மானியர் இவரைச் சிறைப்பிடித்தனர்; இவரது மனைவி, கணவனுக்கு பிஸகோத்துப் பெட்டிகளில் நூல் சிம்புகளை யனுப்பினுள். அவற்ருல் கயிறுதிரித்து, சிறைமுகட்டிற் கட்டி, ஓடுகளைப் பெயர்த்துக்கொண்டு மீரோ வெளியேறி மாறுவேடம்பூண்டு அல்ஜீரியாவுக்கு ஓடிவந்தார். அங்கே அப்போதிருந்த விஷி சர்க்காரைச் சேர்ந்த டார்லான், அமெரிக்கருக்குப் பணிந்தான். அவனை ஒரு பிரெஞ்சு வீரன் சுட்டுக்கொன்ருன். டார்லான் இடத்தில் மீரோ அமர்ந்தான்.

இன்னும் எத்தனையோ வீரதீரர் கோலுக்கு உயிரைக் கொடுத்தும் உதவினார்கள். பிரான்ஸில் ஐந்துவயதுக் குழந்தைமுதல் நூறு வயதுத் தாத்தாக்கள் வரையில் எல்லோரும் கோலை மெச்சி வாழ்த்தினர். ரகசியக் கடிதங்கள் வந்து குவிந்தன. "கோல் மாமா, உன் பேரைக் கேட்டாலே எனக்கு ஆனந்தம்! என்னை உன் படையில் சேர்த்துக் கொள்ளுகிறாயா? நானும் தேசவிடுதலைக்காகச் சண்டைப்போடுகிறேன்" என்று ஆறு வயதுப் பையன் ஒருவன் எழுதினான்! "பிரான்ஸின் ரக்ஷகனே! நீ நீடு வாழ்! நீ வெற்றிமுழக்குடன் பாரிஸிற்கு வரும்போது, லா மார்ஸேய் யேஸ் பாட எனது நா துறு துறுக்கிறது" என்றொரு தாத்தா எழுதினார்! இப்படியாகக் கோலின் காரியம் ரகசியமாக முன்னேறியது!

## கசூ. போரின் பயங்கரம்

தொடக்கத்தில் ஹிட்லரின் பிளிட்ஸ் (Blitz) வேகத்தைக் கண்ட எல்லாருமே அஞ்சினர். ஜூன் 21-ஆம் தேதி பிரான்ஸின் தலைவிதி முடிந்தது. விஷியின் விஷவாடை சுதந்தர மூச்சைப் பிடித்தது. பிரான்ஸில் நாஜித் திருவிளையாடல் கொடுமையாக நடந்தது. இத்தாலி பிரான்ஸின் முதுகில் துப்பாக்கி நீட்டி அட்டகாசஞ் செய்தது. முதலை வாய்ப்பட்ட மதலைபோல, இத்தாலிக்கும் ஜெர்மனிக்கும் இடையே பிரான்ஸ் நரகவேதனைப்பட்டது. ஜெர்மனி தென் பிரான்ஸையும் ஆக்கிரமித்துக்கொண்டு, நாட்டைச் சீர்குலைத்தது. மெயின் காம்ஃபின் முதல் சித்தாந்தம் முடிந்தது. உடனே இங்கிலாந்தைப் படையெடுக்க ஹிட்லர் முனைந்தான்; காலேயில் பெரிய பீரங்கிகளை நாட்டினான்; விமானப்படைகளைப் பெருக்கினான்; 'யூ' போட்டுகளை அனுப்பினான். இங்கிலாந்து, பிரான்ஸின் உதவியுமில்லாமல் மூன்று அரக்கரைத் தனியே எதிர்த்து

னின்றது! லப்ட்வாஃப் பாய்ச்சலால், லண்டன் பர்மிங்காம் லிவர்பூல், கவென்ட்ரி முதலிய இடங்களெல்லாம் குண்டுகளால் பெருஞ்சேத மடைந்தன. "இங்கிலாந்தில் ஆகஸ்டு மாதம் லண்டனில் விருந்து சாப்பிடுகிறேன், பார்!" என்று ஹிட்லர் நறுக்கு மீசையை முறுக்கினன்; இங்கிலாந்தை ஆளக்கூட ஆட்களைத் தயாரித்து விட்டான். இச்சமயம் சர்ச்சில் ஹிட்லரை ஒழிக்கச் சரியான சூழ்ச்சி செய்தார். அமெரிக்காவுடன் நட்புக்கொண்டு ஏராளமான தளவாடங்களை வரவழைத்தார். அவற்றைத் தடுக்க ஹிட்லர் செய்த ஸப்மெரின் போர் பலிக்கவில்லை. இதற்குள் முஸலோனிக்கு அவசரம் பிய்த்துக்கொண்டது; கிரீஸைப் படையெடுத்து மண்ணைக் கௌவினன்!

அன்றே முஸலோனிக்குச் சனிபிடித்தது. வேவல் ஆப்பரிக்காவில் போரைப் பலமாக்கினர். இத்தாலிக்கு லிபியா போனது; கொலைசெய்து வென்ற அபிஸீனியா போய் விட்டது. ஆங்கிலேயர் ஹெய்லி ஸெலாஸியை விமானத்திற் கொண்டுவந்து, அடிஸ் அபாபாவில் முடி சூட்டினர். ஐந்தாண்டுகளுக்குப் பிறகு ஸெலாஸி, போன அரசைப் பெற்றான். இத்தாலியின் ஆப்பரிக்காக் காலனிகள் ஆங்கிலமயமாயின. இச்சமயம் ஹிட்லர், கிரீஸ், யூகோ, ருமேனியா முதலிய நாடுகளை விழுங்கி, கிரீட்டைக் கைப்பற்றி, மெல்ல ஆப்பரிக்காவில் புகுந்து டுப்ரக்கையும் பிடித்து, எகிப்தில் நுழைந்துகொண்டிருந்தான். ரோமெல் பலமான டாங்குகளால் ஸஹாராப் பாலைவனத்தை உழுது முன்னேறினன். நார்வே முதல் மத்தியதரைக்கடல் வரையில் ஜெர்மன் ஆதிக்கத்திலிருந்தது; உலகமே அஞ்சியது. இராக், துருக்கி, பாரசீகம், ஆப்கனிஸ்தான் வரையிலுங்கூட ஜெர்மன் ஐந்தாம்படை புகுந்து விஷமம் செய்துகொண்டேயிருந்தது. இந்தியாவுக்கும் எங்கே மின்னற் படையெடுப்பு வருமோ என்று சிலர் பயந்ததுண்டு.

இச்சமயம் ஹிட்லர் மாலடோவை வரவழைத்து, "எமக்கு நிரம்பக் கோதுமை வேண்டும். யுக்ரேனைத் தந்துவிட்டால் போதும்" என்று ஏதோ பேச்செடுத்தான். உக்ரேன்பக்கம் வந்தால் மாலடோவ் ரொட்டி மண்டையில் விழும் என்று ரஷ்ய மந்திரி சரியான பதிற் சொல்லிவிட்டுச் சென்றான். அச்சமயமே ஹிட்லர் ரஷ்யாவைப் படையெடுக்க ரகசியமாகத் தயார் செய்து கொண்டான். கொயரிங், ஹெஸ் முதலிய மந்திரிகள் இந்த எண்ணம் வேண்டாமென்று தடுத்தனர். மெயின் காம்ஃபின் அடுத்தவேலையை ஹிட்லர் நிறைவேற்றுமல் இருப்பானு? ஹிட்லரின் விபரீத புத்தியைக் கண்டு, விநாச காலம் வந்துவிட்டதென் றறிந்தே ஹெஸ், இங்கிலாந்திற்குப் பறந்துவந்து, அடைக்கலம் புகுந்தான். உலகைப் பிடித்த நல்லவேளை, ஹிட்லர் ஒருநாள் திடீரென்று சோவியத் ரஷ்யாமேல் பாய்ந்தான். அந்தத் தந்திரக் கரடி பின்லாந்தில் கொஞ்சம் பின்வாங்கித் தனக்குப் பலக் குறைவுள்ளதுபோலக் காட்டியது. ஆனுல், "உள்ளே வா வா பிண்டம் பிடிக்கிறேன்" என்று தந்திரமாகச் சூழ்ச்சி செய்துகொண்டேயிருந்தது. ஜெர்மனியின் வெற்றி ஓங்க ஓங்க, ரஷ்யாவும் மெல்லமெல்லப் போலந்தின் பாதியை, பெஸ்ஸரேபியாவை, லித்வேனியாவைப் பிடித்துக்கொண்டு நரிவேலை செய்தது; ஹிட்லரின் புலிப் பாய்ச்சலுக்கும் மெல்லப் பின்வாங்கிக் கொண்டிருந்தது. ஹிட்லர் உக்ரேனை வென்று கோதுமையை அள்ளக் கோணிப்பைகளைக் கொண்டுவந்தான்; ஒரு மணிகூடக் கிடைக்கவில்லை. எல்லாவற்றையும் முன்பே அறுவடையாக்கி ஸ்டாலின் தன் களஞ்சியத்திற் சேர்த்தான்! ஹிட்லர் வடகடலிலிருந்து கருங்கடல் வரையில் படை நிறுத்தி, மாஸ்கோ, லெனின்கிராடு, கீவ் முதலிய நகர்களையெல்லாம் பொடி சூரணமாக்கத் தாவி வளைத்தான். கீவைப் பிடித்துக்கொண்டு ஸ்டாலின்கிராடுக்குத்

நாவினுன். முதல்தடவை அதைப் பிடித்தான்; பிறகு மூரலே நோக்கிச் சென்ருன். இதுகாறும் தாக்குப்பிடித்த ஸ்டாலின் மீசையை முறுக்கி எழுந்தான். இரவும் பகலும் சோவியத் தொழிலாளர், அற்புதமான யந்திரங்களைக் கொண்டு வேலைசெய்து ராக்ஷஸ பீரங்கிகளையும் டாங்கு களையும் விமானக் கோட்டைகளையும் தயாரித்தனர்; விதவிதமான குண்டுகளைச்செய்து வீசினர். குளிர்காலத் தில் நாஜிப்படைகளைப் பனிக்குவைகளில் புதைத் தொழியச் செய்தனர். ஹிட்லர் வெயில் வந்ததும் மறுபடி யும் ஸ்டாலின்கிராடுப் போர் தொடங்கினுன்; பலிக்க வில்லை; பல்லுடைபட்டுத் திரும்பினுன். அன்று முதல் அவனுக்குச் சனியன் பிடித்தது. ஸ்டாலின் நாஜி நமனைத் துரத்தியடித்து, எல்லைக்கப்பால் விரட்டியது மட்டு மன்றி, வார்ஸாவையும் பிடித்து, பெர்லினைத் தாக்கினுன். ஜெர்மனி யின் உயிர் சோவியத் சம்மட்டிமுனையில் துடிக்கிறது.

இதற்குள் ஹிட்லர் பசிபிக்கில் ஜப்பானைத் தூண்டி விட்டான். ஜப்பான் ஒயிட் ஹாலில் சமாதானம் பேசிக்கொண்டே, பேர்ல் ஹார்பாரிலும் சிங்கப்பூரிலும் குண்டுபோட்டுப் போர் முழக்கியது; ஜப்பான், மலாயா, பிலிப்பீன், ஜாவா, பர்மா நாடுகளைக் கைப்பற்றிக், கொண்டு, சீனத்தின் உயிரை வாங்கிக் கொண்டிருந்தது. நல்லவேளையாக அமெரிக்கா போரிற் குதித்து, இங்கிலாந் திற்குப் பெருந்துணை செய்தது. சர்ச்சிலும் ரூஸ்வெல்டும் வாஷிங்டனிற் கூடிப்பேசி ஒரு முடிவுக்கு வந்தனர். அமெரிக்கப் படைகள் முதலில் வட ஆப்பரிக்காவிற் குறிவைத்து ரோமலை விரட்டியடித்தன. டோப்ருக் மீண்டது; டுனிஸ் மீண்டது; ரோமல் ஓட்டமெடுத் தான். தளவாய் மாண்ட்காமெரி இத்தாலிமேல் பாய்ந் தான். அச்சின் நாடி தளர்ந்தது. காசப்ளாங்காவில் நேசத் தலைவர்கள்கூடி அச்சுத் தலைவரின் சரணுகதியை வேண்டினர். 1943-ஆம் ஆண்டு, நல்ல ஆண்டு! அதிட்ட

சக்கரம் ஆங்கிலேயர் பக்கம் திரும்பியது. ஸிஸ்லி பிடிபட்டது; கோர்ஸிகா பிடிபட்டது; சுதந்தர பிரெஞ்சுக்கொடி அதிற் பறந்தது. ரோம் பிடிபட்டது; முஸலோனி வீழ்ச்சியடைந்தான்; படோக்ளியோ எழுந்து சமாதானம் செய்துகொண்டான். இத்தாலியில் ஆங்கில அமெரிக்கப் படை முன்னேறியது.

இதேசமயம் இங்கே கோல் தயாராய்விட்டான். சர்ச்சில் பெரிய முஸ்தீப்புடன் கிளம்பினார். அமெரிக்கப் படை, ஈசன்ஹவர் தலைமையிற் சீறியெழுந்தது.

## கஎ. விடுதலை! விடுதலை!

கோல், 1944 ஜுலை மாதமே அமெரிக்காவுக்குச் சென்று, ரூஸ்வெல்டைக் கண்டு எல்லாம் பேசி முடித்தான். ஆகஸ்டு மாதம் நல்ல மாதம். ஜெர்மன் படைகள் எவ்வளவோ உஷாராகத் துப்பாக்கியை நீட்டி வேட்டையாடிக் கொண்டிருந்தன. பீரங்கிகள் ஊழித்தீ கக்கி இடிமுழக்கம் செய்தன. ஈசன்ஹவரின் படை ஓசைப் படாமல் பிரெஞ்சுக் கரையேறிப் பிறகு, ஜெர்மனியைப் பிண்டம் பிடிக்கத் தொடங்கியது. பிரான்ஸெங்கும் சுதந்தரப் படைகள் முன்பே தயாரித்தபடி ரகசியமாகக் கிளம்பின. "வீட்டை விட்டுக் கிளம்பினல் சுடுவோம்; எதிரிக்குதவினுல் பீரங்கிவாயில் வைப்போம்" என்று நாஜிப் படை கெடுபிடி செய்தும் பலிக்கவில்லை. நேசப் படை புகுந்த இடமெல்லாம் சுதந்தர வீரர் கூட்டங் கூட்டமாகக் கிளம்பி, நாஜிப் படைகளைத் தகர்த்தெறிந்தனர். பிறர் நாட்டை அன்னியர் ஆளமுடியாது என்னும் உண்மை, ஆகஸ்டு பதினெட்டாந்தேதி பாரிஸில் தெரிந்தது! அன்று கெஸ்டாபோக்களும், இராணுவ நாஜிகளும் பாரிஸ் தெருக்களில் நரவேட்டை யாடினர்கள். சுதந்

தரம் என்றால் சுட்டனர்; தேசியகீதம் முணுமுணுத்தாலும் கொன்றனர்; தேசபக்தியையே கொலைசெய்ய அசுரத்தனமாகக் கிளம்பினர். இரவில் புரட்சிக்காரர் எழுந்தனர்; காலை நான்கு மணிக்கு ஆயிரக்கணக்கான குரல்கள் லா மார்சேய் யேஸ் பாடிக்கொண்டே "அன்னிய நாஜிகள் ஒழிக, ஒழிக!" என்று கூச்சலிட்டு முக்கியமான இடங்களையெல்லாம் வளைத்துக் கொண்டன. நாஜிகள் கைக்கெட்டியவர்களை யெல்லாம் சுட்டனர்; சிறை பிடித்தனர். பிரெஞ்சு வீரர் பகைவர் பிடியைத் தப்பித் திருப்பிச் சுட்டனர்; ஜெர்மானியரைக் கைதியாக்கினர். அவர்கள் பீரங்கிகளையே முற்றுகைபோட்டுப் பிடித்து அவர்களையே சுட்டனர். இச்சமயம் ஆகாயக் குடைவழியே அமெரிக்கப் படைகளும் கோலின் படைகளும் இறங்கின. பதினாயிரக்கணக்காக வந்த நேசத்துருப்புகள் எங்கிருந்தோ பீரங்கிகளையும் துப்பாக்கிகளையும் பிரயோகித்து நாஜிகளை நசுக்கின. நாஜிகள் விடேன் கொடேன் என்று எதிர்த்தனர். சுதந்தர வீரர் அவர்களை முதன்மையான இடங்களி லிருந்தெல்லாம் எற்றித்தள்ளி மிதித்துப் போராடி விரட்டினர். தெருச்சண்டை வீட்டுச்சண்டை எல்லாம் நடந்தன. முடிவில் நேசக்கட்சியே பாரிஸை வென்றது. நாஜிக்கட்சி பின்சென்றது; அமெரிக்கப் படைகளும் பிரெஞ்சுப் படைகளும் மேன்மேலும் பகைவரை நாட்டினின்றோட்டி, சுதந்தரக் கொடி நாட்டின.

ஆகஸ்டு மாதம் 26ந் தேதி தளவாய் கோல் வந்தான்: லட்சக்கணக்கான பிரெஞ்சுக்காரர் அணியணியாக நின்று லா மார்சேய் யேஸ் பாடினர்; அலங்காரத் தெருக்களூடு வெற்றி முழக்கம் செய்து பவனி வந்தனர்! தளவாய் கோல், அல்ஜீரியாவி லிருந்து பாரிசுக்கு எழுந்தான். "வாழ்க தளவாய் கோல், வாழ்க சுதந்தரம், வாழ்க பிரான்ஸ்! வாழ்க நான்காம் குடியரசு!" என்று ஜனசமுத்திரம், ஆரவாரத்துடன் அவனை வரவேற்றது!

வெற்றி வளைவிற்கு அவன் வரும்போது, ஒரு கொடிய பகைவன் சுட்டான்; தளவாய் நல்ல வேளையாகத் தப்பினான். உடனே கோல், சுதந்தர வீரர் பலியான இடங்களைப் பார்த்து வணங்கினான். நோத்ருதாம் சர்ச்சிற்குச் சென்று, "கடவுளே! எனது தேசம் என்றும் சுதந்தரமாயிருக்க அருள்புரி" என்று வேண்டிக்கொண்டு, தன் மாளிகைக்கு வந்தான்; பிரான்ஸை விடுதலை செய்யத் துணைநின்ற அமெரிக்க-ஆங்கில நண்பர்களுக்குப் பெரு விருந்து நடத்தினான்; 'இனி நான்காம் குடியரசு திறமையாக நடக்க, தக்க மந்திரிகளை நியமித்து ஆட்சிமுறையை வகுத்தான்; உடனே ஜெர்மனியை முறியடித்து, உலகில் அமைதியுண்டாக்க வேண்டிய படைவலி பெருக்கத் தொடங்கினான். அப்போது அவன் பேசியதன் சாரமாவது:

"பிரெஞ்சுக்காரர்களே! நமது தேசம் விடுதலையடைந்தது; துரோகிகளின் தலை கவிழ்ந்தது. எனக்கும் சுதந்தர வீரருக்கும் மரணதண்டனை விதித்த பொம்மையரசு, அடிமையரசு செத்துப்போனது; பாரிஸ் விடுதலை பெற்றது! ஆனால் இது நமது வெற்றியின் முதற்படியே. இன்னும் நாம் செய்யவேண்டிய காரியங்கள் ஏராளமாயிருக்கின்றன. நமக்குத் துணைசெய்த ஆங்கில நேயருக்கு நாம் இப்போது துணைசெய்து, ஹிட்லரை ஒடுக்கி ஜெர்மனியைக் கைப்பற்ற வேண்டும். ரஷ்யா, பெர்லினை அணுகுகிறது. நாம் சோவியத் படைகளுடன் ஐக்கியமாகி, நாஜிகளை ஒழிக்கவேண்டும். இன்றுலகில் ரஷ்யா, அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய மூன்றும் வல்லரசுகளாயிருக்கின்றன. நமது பிரான்சும் குறைநீங்கி நலிவகன்று, திண்மையுற்று வெற்றியுள்ள வல்லரசாகி உலகில் தலை நிமிரவேண்டும் நாம் இழந்த காலனிகளை அடைந்தே தீருவோம்; தாய்லாந்தை மீண்டும் பெறுவோம். பிரெஞ்சுக் காரர்களே! மறுபடியும் நமது குடியரசையும் காலனி

களையும் பலப்படுத்தும் பொறுப்பு, நமக்கிருக்கிறது. ஓயாது விழிப்புடன், சுயமரியாதையுடன் பாடுபடுங்கள்!"

ஆயிரக்கணக்கான பிரெஞ்சுக்காரர் தளவாய் கோலின் கர்ஜனையை லா மார்சேய் யேஸ் (La Marseillaise) கீதம் பாடி ஆமோதித்தனர். இக் கீதமே இன்றும் பிரெஞ்சுக்காரருக்கு ஆவேச மளித்துவரும் தேசீயப் பாடலாகும். அதன் பண்ணும், துடிப்பும், வீறு பெற்ற சொல்லழகும் இணையற்றவை. இச் சிறந்த வீரப் பாட்டின் உள்ளுணர்ச்சியைத் தமிழில் பாடுகிறேன்; கேளுங்கள்:—

## எடுங்கள் ஆயுதங்களை!

இராகம்: பிஹாக்] [திஸ்ர ஏக தாளம்

பல்லவி

எடுங்கள் ஆயு தங்களை
இகற்படையைச் சாடுவோம்! (எடுங்)

அநுபல்லவி

தொடை நடுங்கும் பேடி யார்?
துணிந்த வீரர் முன்செல்வோம்! (எடுங்)

சரணங்கள்

செல்வோம் சுதேசப் புதல்வர்—நம்
சீர்த்தி பெருகுமிந் நாளே!
கொல்பகை ரத்தக் கொடியைத்—தாங்கிக்
கோபங் குமுறுது காணீர்! (எடுங்)

நல்லநம் மக்களை வெட்டிப்—படு
நாசஞ்செய் மோசப் பகையை
வெல்வோம், பெருமிதங் கொள்வோம்—வாரீர்
வேகமாய்ப் போர்க்களம் செல்வோம்! (எடுங்)

அண்டிய கூலிப்படைகள்—நம்மை
ஆள விதிசெய லாமோ?
தொண்டடிமை செய்து நாமும்—தேசத்
துரோகிக ளாவது நன்றோ? (எடுங்)

பண்டு புகழ்பெற்ற நாட்டீர்—இங்கே
பாழ்செய் அசுரர் அழிய—நம்மைக்
கண்டு நடுங்கக் கொடுங்கோல்—வீரக்
காளைகள் போர்தர வாரீர்! (எடுங்)

வீரன் ஒருவன் விழுந்தால்—பத்து
வீரர் எழுந்துமுன் நிற்பார்!
போரில் இரத்தத்தைச் சிந்தி—முன்னே
போந்தநந் தோழரை எண்ணி! (எடுங்)

வீறுகொண் டேசமர் செய்வோம்—என்றும்
விடுதலை தந்திடும் சக்தி—அடல்
ஏறுபோல் நம்வினை செய்வோம்—முன்
னேறுங்கள் வீறுகொள் நாட்டீர்! (எடுங்)

முற்றிற்று

புதிய வெளியீடுகள் :

# அன்பு நிலய நூல்கள்

## யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் இயற்றியவை

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| கதை விருந்து (2-ஆம் பதிப்பு) | ... | 1 | 8 |
| வளையாபதி அகவல் (2-ஆம் பதிப்பு) | ... | 0 | 12 |
| கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை | ... | 0 | 7 |
| நல்ல குடும்பம் (சிறு கதை) | ... | 0 | 7 |
| நாதஜோதி முத்துசாமி தீட்சிதர் | ... | 0 | 7 |
| சங்கீத ஜோதி தியாகராஜர் | ... | 1 | 0 |
| கான ஜோதி சாமாஸாஸ்திரிகள் | ... | 0 | 8 |
| ஓவியக்கவி வில்லியம் ப்ளேக் (William Blake) | ... | 0 | 10 |
| புதுக்கவி விட்மன் (அமெரிக்க கவி) | ... | 1 | 8 |
| மகாகவி ராஸீன் (பிரெஞ்சுக் கவி) | ... | 1 | 4 |
| மகாகவி தாந்தே (இத்தாலியக் கவி) | ... | 1 | 8 |
| ஞானி எமர்ஸன் (Emerson) | ... | 0 | 6 |
| அருணாசலக் கவிராயர் | ... | 0 | 8 |
| அற்புதப் பெண்மணி (ரேடியம் மேரி - கூரி) | ... | 1 | 0 |
| நாடகமணி மோலியர் | ... | 0 | 13 |
| மீனாட்சிசுந்தரம் பிள்ளை (மஹா வித்வான்) | ... | 0 | 10 |
| அகஸ்தியர் யாத்திரை | ... | 1 | 10 |
| பாரத சக்தி மகா காவியம் (க. சித்திகாண்டம்) | ... | 9 | 0 |
| இன்பமாலை (3 ஆம் பதிப்பு) | ... | 1 | 0 |
| சிதம்பர கீதம் (இசை நூல்) | ... | 1 | 4 |
| தேவகானம் (ஷை) | ... | 1 | 4 |

ANBU NILAYAM, PUBLISHERS,
Ramachandrapuram (P.O.), : : Trichy Dist.
TIRUMAYAM (S. I. Ry.) S. INDIA.

